# துர்கேச நந்தினி

## இரண்டாம் பாகம்

### முதல் அத்தியாயம்

### அயேஷா

ஜகத்சிங் பிரக்ஞை வந்து கண்திறந்து பார்த்தபொழுது, தான் ஒரு ரம்மியமான மாளிகையில், ஒரு படுக்கையில் படுத்துக் கொண்டிருப்பதைக் கண்டான். யார் வீட்டில் படுத்துக் கொண்டிருந்தான், யார் அவனை அங்கே கொண்டு வந்தார்கள். ஒன்றும் அவனுக்குத் தெரியாது. அறை மட்டும் மிகவும் நன்றாக இருந்தது. அழகாக இருந்தது. திவ்வியமான மாளிகை. கால்பட்டபொழுது மிகவும் மிருதுவாக இருந்த கம்பளங்கள் தரையில் விரிக்கப்பட்டிருந்தன. தங்கம், வெள்ளி, தந்தம் முதலியவைகளால் விலையுயர்ந்த வகைகளில் செய்யப்பட்ட பன்னீர் கூஜா முதலிய சாமான்கள் எங்கே பார்த்தாலும் இருந்தன. அறை வாசலிலும் ஜன்னலிலும் நீலத்திரை போடப்பட்டிருந்தது. இம்மாதிரி அநேக விதங்களில் அறை மனோகரமாய் இருந்தது

அறை ஒருவரும் இல்லாததுபோல நிச்சப்தமாக இருந்தது. ஒரு வேலைக்காரி வாசனையேற்றிய விசிறியொன்றைக் கையிலேந்தி, ராஜபுத்திரனுக்கு விசிறிக் கொண்டே நின்றாள். மற்றொரு வேலைக்காரி பேச்சு மூச்சின்றி சித்திரப்பதுமை போல நின்று கொண்டிருந்தாள். ராஜபுத்திரன் படுத்துக் கொண்டிருந்த கட்டில் யானை தந்தம் பதித்து அலங்கரிக்கப்பட்டிருந்தது. அதன்மேல் அவன் பக்கத்தில், ஒரு பெண் உட்கார்ந்து கொண்டு, அங்கங்களில் இருந்த காயங்களில் ஏதோவொரு மருந்தைத் தடவிக் கொண்டிருந்தாள். மாளிகையின் தரையில், விரிப்பின்மேல், ஒரு பட்டாணியன் உட்கார்ந்திருந்தான். அவன் தாம்பூலம் தரித்துக் கொண்டே ஒரு பாரசீக பாஷைப் புத்தகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒருவரும் ஒன்றும் பேசவில்லை.

ராஜபுத்திரன் கண்ணைத் திறந்ததும் அறையைச் சுற்றி நாலு பக்கங்களிலும் பார்த்தான். ஒரு பக்கம் திரும்ப முயன்றான். ஆனால் சரீரத்தை அசைக்கக்கூட முடியவில்லை உடம்பு முழுவதும் பொறுக்க முடியாத வலி

கட்டிலில் உட்கார்ந்திருந்த பெண் ராஜபுத்திரன் செய்ய முயற்சியைக் கண்டு வீணைபோன்று இனிமையும் கம்பீரமும் கூடிய குரலில், "அசையாமல் இருக்க வேண்டும்; புரளக்கூடாது!" என்றாள்.

பலவீனமான குரலில் ராஜபுத்திரன், "நான் எங்கிருக்கிறேன்?" என்று கேட்டான்.

"பேசக்கூடாது. நீங்கள் சௌகரியமான இடத்தில்தான் இருக்கிறீர்கள். கவலைப்பட வேண்டாம். பேசவும் வேண்டாம்" என்று அதே மதுரமான குரலில் அந்தப் பெண் பதில் சொன்னாள்.

ராஜபுத்திரன் மறுபடியும் அதே பலவீனமான குரலில், "இப்பொழுது என்ன நேரம்?" என்று கேட்டான்.

"பிற்பகல்" என்றாள் அந்தப் பெண். மேலும் அவள் தன் குயிற்குரலில், "பேசினால் உடம்பு சௌகரியமாகாது. நீங்கள் பேசாமல் இருக்காவிட்டால் நான் எழுந்து போய்விடுவேன்" என்று சொன்னாள்.

"இன்னும் ஒரே ஒரு கேள்வி; நீ யார்?" என்று ராஜபுத்திரன் கஷ்டப்பட்டுக் கொண்டு கேட்டான்.

"அயேஷா!" என்றாள் அவள்.

ராஜபுத்திரன் மௌனமாகிவிட்டான்; விடாமல் அவள் முகத்தைப் பார்த்தான். அவளை அதற்குமுன் எங்காவது பார்த்திருந்தானா? இல்லை. எங்கும் பார்த்ததே இல்லை. அது நிச்சயம்.

அயேஷாவிற்கு சுமார் இருபத்திரண்டு வயதிருக்கும். பார்ப்பதற்கு அவள் மிகவும் அழகாக இருந்தாள். ஆனால் அவளது அழகை நாலைந்து வார்த்தைகளில் வர்ணித்து வெளியிட்டுவிட முடியாது. திலோத்தமையும் ரூபவதிதான்; ஆனால் அயேஷாவின் அழகு அந்த மாதிரியானதல்ல. யௌவனம் மாறாத விமலாவின் அழகும் மனத்தை மயக்குவதாகத்தான் இருந்தது. அயேஷாவின் அழகு அப்பேர்ப்பட்டதும் அல்ல. சில யுவதிகளின் அழகு வஸந்த காலத்து மல்லிகையைப் போன்றது; புது மலர்ச்சியின் வெட்கமும் மிருதுத் தன்மையும் கொண்டது; குற்றமற்றது; மணம் மிகுந்தது. திலோத்தமையின் அழகு அப்பேர்ப்பட்டது. சில பெண்களின் அழகு மாலையின் ஸ்தலபத்மம் (ரோஜா) போன்றது. மலர்ச்சி மதம் கொண்டது; இதழ்கள் குன்றியது; ஆனாலும் பிரகாசம் கொண்டது. அதிகம் மலர்ந்தது; அதிக சோபை கொண்டது; அது நிறைந்தது மிருதுவானது; ஆனாலும், ஜாஜ்வல்யமானது; நிறைந்த இதழ் வரிசைகளிலிருந்து சுவர்ண சோபை ததும்பும்

விமலா விளக்கைப் போன்ற ஜோதி; திலோத்தமை இளம் சந்திரப்பிரபை; அயேஷா பால சூரியப் பிரகாசம்.

உத்தியானத்தின் நடுவில் தாமரைப் பூ எப்படியோ அப்படி இந்தக் கதையின் நடுவில் அயேஷா இருக்கிறாள். ஆகையால் அவளுடைய அங்க சௌந்திரியத்தை வாசகர்களுக்கு எடுத்துக்காட்ட வேண்டியது அவசியம் நான் ஓவியக்காரனாயிருந்தால் அவளுடைய உடலின் வர்ண சோபையைத் தீட்டிக் காண்பிப்பேன். சம்பகமல்ல, ரோஜா அல்ல, வெண் தாமரையுமல்ல அந்த மேனியின் சாயல்; மூன்றும் கலந்த ஒரு மதுரவர்ணம். மன்மதனின் விளையாட்டுப் பூமி போன்றது அவளுடைய விசாலமான நெற்றி. அதற்குமேல் அழகான வளைந்த அவளுடைய கூந்தலில். அக்கோடு கன்னங்களின் உருட்சி வட்டத்தைப் பூர்த்தி செய்தது; நெருங்கிய புருவங்கள் அடர்ந்து வளர்ந்திருந்தன; ஊசிமுனைபோல் முடிவு கொண்டிருந்தன; அவளுடைய நேத்திர பல்லவங்கள் மின்னல் ஒளி நிறைந்த மேகம்போலச் சஞ்சலித்தன; அவைகள் நீண்டும் பரந்தும் இருந்தன. கர்வம் கொண்ட அழகிய நாசி; மனத்தை மயக்கும் மது நிரம்பிய இதழ்கள்; வெண்சங்கம் போன்ற கழுத்து; காதணிகள் தொங்கித் தங்கிய உருண்ட தோள்கள்; உருண்டு மிருதுவாக இருந்த கைகள்; மோதிரங்கள் மின்னும் விரல்கள்; தாமரையின் சிவப்பைக் கொண்ட மிருதுவான உள்ளங்கைகள்; முத்துமாலை அணிந்த உயர்ந்த மார்பு; நான் ஒரு சித்திரக்காரனாயிருந்தால் இவைகளையெல்லாம் அப்படியே வர்ணத்தில் தீட்டிக் காட்டுவேன். ஆனால் அந்த எழிற் கடலின் ஸாரமாகிய கௌஸ்துவ ரத்தினம் - அவளுடைய நீண்ட கடைக்கண் - மாலைக் காற்றில் மெள்ள அசையும் நீலோத்பலம் போன்ற அந்தக் கடைக் கண்ணை நான் எழுத முடியாது.

ராஜபுத்திரன் வெகுநேரம் அயேஷாவைப் பார்த்துக்கொண்டே இருந்தான். அவனுக்குத் திலோத்தமையின் நினைவு வந்தது. நினைத்தவுடனேயே அவன் இதயத்தில் ஏற்பட்ட துடிப்பால் காயங்களிலிருந்து ரத்தம் பெருக ஆரம்பித்தது; ராஜபுத்திரன் மறுபடியும் மூர்ச்சையடைந்து கண்களை மூடிக் கொண்டான்.

பக்கத்தில் உட்கார்ந்திருந்த பெண் பயந்து போனாள். சட்டென்று எழுந்து நின்றாள். தரையில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்தவன் நடுநடுவே அன்புடன் அவளைப் பார்த்துக் கொண்டே இருந்தான். எழுந்திருந்தவள் மெள்ள அவளிடம் சென்று அவன் காதில், "உஸ்மான், உடனே ஹகீமுக்கு ஆள் அனுப்பு" என்றாள்.

மாந்தாரணக் கோட்டையைப் பிடித்த உஸ்மான்கான்தான் அங்கே உட்கார்ந்திருந்தவன். அயேஷா சொன்னதைக் கேட்டதும் அவன் எழுந்து வெளியே போனான்.

அயேஷா அருகில் ஏதோ பாத்திரத்திலிருந்த ஒரு திராவகத்தைக் கொண்டு வந்து ராஜபுத்திரனின் முகத்தில் தெளித்தாள். கொஞ்சநேரத்தில் உஸ்மான்கான் ஹகீமுடன் திரும்பி வந்தான். வைத்தியர் மிக்க சிரமப்பட்டு ரத்தப் பெருக்கை நிறுத்தினார். அயேஷாவிடம் பல மருந்துகளைக் கொடுத்து அவைகளை உபயோகிக்கும் முறையையும் அவளுக்குச் சொன்னார்.

"தேக நிலை எப்படியிருக்கிறது?" என்று அயேஷா ரகசியமாக ஹகீமைக் கேட்டாள்.

ஜுவரம் மிகவும் கடுமையாக இருக்கிறது என்று சொல்லிவிட்டு ஹகீம் வெளியே போகும்பொழுது உஸ்மானும் கூடவே தொடர்ந்து சென்று, "அவரைக் காப்பாற்ற முடியுமா?" என்று கேட்டான்.

"நிச்சயமில்லை. ஆனால் இன்னும் பிரயத்தனம் செய்து என்னாலானதைப் பார்க்கிறேன்" என்றார் ஹகீம்.

## இரண்டாம் அத்தியாயம்

## நறுமலரின் நெஞ்சில் கல்

அயேஷாவும் உஸ்மானும் அப்படி நாள் முழுதும் இரவும் பகலுமாக ஜகத்சிங்கின் படுக்கையருகிலே கழித்தார்கள். ஜகத்சிங் சில சமயங்களில் பிரக்ஞை பெற்றான்; சில சமயங்களில் மறுபடியும் மூர்ச்சை அடைந்தான். ஹகீம் பல தடவை வந்து பார்த்துக் கொண்டிருந்தார். ஓய்வின்றி அயேஷா ஜகத்சிங்கின் பக்கத்திலிருந்து சுச்ருஷை செய்தாள். இரவு வெகுநேரமானதும் ஒரு வேலைக்காரி வந்து அயேஷாவைத் தாய் கூப்பிடுவதாகச் சொன்னாள்.

வருகிறேன் என்று சொல்லி அயேஷா எழுந்தாள். உஸ்மானும் எழுந்தான்.

"நீயும் புறப்பட்டு விட்டாயா?" என்றாள் அயேஷா.

"ராத்திரியாயிருக்கிறது. போ. நான் உன்கூட வருகிறேன்" என்றான் உஸ்மான்.

கவனமாக இருப்பதற்கு வேண்டிய முறைகளை வேலைக்காரர்களுக்குச் சொல்லிக் கொடுத்துவிட்டு அயேஷா தாய் வீட்டை நோக்கிப் புறப்பட்டாள். வழியில் உஸ்மான், "நீ இன்று அம்மாவிடமே இருக்க வேண்டுமா?" என்று கேட்டான்.

"இல்லை, நான் மறுபடியும் ராஜபுத்திரனிடம் திரும்பி வந்துவிட வேண்டும்".

"அயேஷா! உன்னுடைய நற்குணத்திற்கு எல்லையே இல்லையா? நீ இந்தப் பரம சத்துருவுக்கு இப்படி சுச்ருஷை செய்கிறாய். கூடப்பிறந்த சகோதர சகோதரிகள்கூட அப்படிச் செய்யமாட்டார்கள். நீ அவனுக்கு உயிரை அளித்துவிட்டாயே!"

அயேஷா வடிவு முகத்தில் ஒரு சிரிப்புடன், "உஸ்மான், நான் சுபாவத்திலே பெண்; ஆபத்தடைந்தவர்களுக்குச் சேவை செய்வது என் தர்மம். அப்படிச் செய்யாவிட்டால் தோஷம். இதில் ஒன்றும் விசேஷமில்லை. ஆனால் நீ அவனுடைய பரம சத்துரு - நீ அவனுக்குச் சேவை செய்து கொண்டிருக்கிறாய்; அவன் ஸ்வஸ்தமடைவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்திருக்கிறாய். உண்மையில் உன் காரியத்தைத் தான் மெச்ச வேண்டும்" என்றாள்.

உஸ்மான் கொஞ்சம் அசடுதட்டின முகத்துடன், "அயேஷா! நீ உன்னைப் போலவே எல்லோரையும் நல்ல மனத்துடன் பார்க்கிறாய். என்னுடைய நோக்கம் நீ சொல்வதுபோல அவ்வளவு நல்லெண்ணம் கொண்டதன்று. ஜகத்சிங் பிழைத்தெழுந்தால் எனக்கு நல்லது; அதில் எனக்கு லாபமிருக்கிறது என்று உனக்குத் தெரியுமா? ராஜபுத்திரன் இப்பொழுது இறந்து போய் விட்டானானால் நமக்கென்ன லாபம்? மான்சிங்கிற்கு ஜகத்சிங் ஒருவன்தான் யுத்தவீரன்? இவன் போனால் இன்னொருவன் வருகிறான். ஆனால் ஜகத்சிங் உயிருடன் நம் கைதியாக இருந்தால், மான்சிங்கை ஒரு கை பார்க்கலாம். தன்னுடைய அருமை மகனின் விடுதலைக்காக அவன் நம்முடன் கட்டாயம் உடன்படிக்கை பேச வருவான்; நாம் நன்னடத்தையால் ஜகத்சிங்கின் நல்லெண்ணத்தைப் பெற்றால் அவன் மூலமாக மான்சிங்கை நம் இஷ்டப்படி செய்யச் சொல்லலாம்; முயற்சி செய்யலாம். அது முடியாமற்போனால் போகாது - கடைசியாக ஜகத்சிங்கை விடுதலை செய்வதற்குப் பணம் கேட்கலாம். மான்சிங்கிடம் யதேஷ்டமாகப் பணம் இருக்கும். அயேஷா, என்றாவது ஒருநாள், ஜகத்சிங்குடன் நேரில் யுத்தமும் புரியலாம் என்பதும் அவன் பிழைப்பதில் எனக்கு ஓர் உற்சாக மூட்டும் காரணம்".

இதையெல்லாம் முன்யோசனை செய்துதான் உஸ்மான் ஜகத்சிங்கின் சிகிச்சையில் அவ்வளவு ஈடுபட்டிருந்தான்; சந்தேகமில்லை. ஆனால் இன்னும் ஒரு விஷயங்கூட இருந்தது. உலகம் தங்களைத் தயாளசித்தம் படைத்தவரென்று சொல்லுவதற்கு அஞ்சி வெளியில் கடுமையாக இருப்பது சிலர் வழக்கம் கொடை முதலியவைகளைப் பெண்களின் தலையில் சுமத்திப் பரோபகாரம் செய்வது இவர்கள் முறை. இதில் அதிக சௌகரியமிருக்கிறது என்று சிலர் கருதுகிறார்கள். அவர்களில் ஒருவன் உஸ்மான் என்று அயேஷாவுக்குத் தெரியும். "உஸ்மான், உன்னைப் போன்றவர்கள் எல்லா விஷயங்களிலும் தீர்க்கதரிசிகளாகத்தான் இருக்கிறார்கள். ஆகையால் இதில் தர்மம் ஒன்றும் இல்லை" என்றாள் அவள்.

உஸ்மான் கொஞ்ச நேரம் இங்குமங்கும் சென்றுவிட்டு, "நான் பெரும் சுயநலவாதி என்பதற்கு மற்றொரு அத்தாட்சியும் இருக்கிறது" என்றான்.

அயேஷா தன் மின்னல் அடங்கிய மேகக் கண்களைத் திருப்பி உஸ்மானின் முகத்தை உற்று நோக்கினாள்

"நான் ஆசைக் கொடியை வளர்க்கிறேன். இன்னும் எவ்வளவு நாள் நான்தான் ஜலம்விட்டுக் கொண்டிருக்க வேண்டும்?"

அயேஷாவின் முகவிலாசம் கம்பீர சோபை கொண்டது. அதிலும் ஒரு புது வனப்புப் பூத்து நின்றது.

"உஸ்மான், உடன் பிறந்த சகோதரி போல நான் உன்னுடன் பழகுகிறேன். வேறுவிதமாக பேசினால் நான் உன் முன்னால்கூட வரமாட்டேன்".

உஸ்மானின் முகம் விழுந்துவிட்டது.

"இது பழங்கதை! கடவுளே! இந்தப் பூப்போன்ற மேனியில் எப்பேர்ப்பட்ட கல் மனத்தைப் பதித்திருக்கிறாய்?" என்றான் அவன்.

உஸ்மான் அயேஷாவுடன் அவளுடைய தாயார் வீட்டுவரை சென்றுவிட்டுத் திரும்பிவந்து உடைந்த மனத்துடன் படுத்துக் கொணடான்.

ஜகத்சிங் கடும் ஜுர வேகத்தில் படுக்கையில் படுத்துக் கிடந்தான்.

## மூன்றாம் அத்தியாயம்

## நீ திலோத்தமையா?

மறுநாள் சாயங்காலம் ஜகத்சிங்குடைய அறையில் அயேஷா, உஸ்மான், வைத்தியர் மூவரும் மௌனமாக உட்கார்ந்திருந்தார்கள். அயேஷா கட்டிலில் உட்கார்ந்து விசிறிக் கொண்டிருந்தாள். வைத்தியர் ஜகத்சிங்கின் நாடியைப் பரீக்ஷை செய்து கொண்டிருந்தார். ஜகத்சிங் பிரக்ஞையற்றுக் கிடந்தான். அன்றிரவு ஜுரம் தணியும்பொழுது ஜகத்சிங்கின் நாடி விழாமலிருந்து விட்டால், அவன் பிழைத்து விடுவான் என்று வைத்தியர் சொன்னார். ஜுரம் தணியும் சமயம் வந்து விட்டது. ஆகையால் எல்லோரும் மிகுந்த கவலையுடன் இருந்தார்கள். வைத்தியர் அடிக்கடி நாடியைப் பரீட்சை செய்து பார்த்துக் கொண்டிருந்தார். "நாடி பலம் குறைகிறது, இன்னும் விழுகிறது, இப்பொழுது கொஞ்சம் சுமார்" என்று அடிக்கடி மெதுவாகச் சொல்லிக் கொண்டே இருந்தார். திடீரென்று வைத்தியர் முகம் கறுத்தது; இதுதான் சமயம் என்றார்.

உஸ்மானும் அயேஷாவும் மூச்சுவிடாமல் கவனித்தார்கள். வைத்தியர் மறுபடியும் கையைப் பிடித்துப் பார்த்தார்.

கொஞ்ச நேரத்திற்குப் பிறகு, "நாடி மெள்ள ஓடுகிறது" என்றார். அயேஷாவின் முகம் வாட்டமடைந்தது. திடீரென்று ஜகத்சிங்கின் முகத்தில் மாறுதல்கள் ஏற்பட்டு. முகம் வெளுத்தது; கைகள் இறுக மூடிக் கொண்டன. கண்கள் விபரிதமாக நிலைகுத்த ஆரம்பித்தன. நெருக்கடி காலம் கிட்டிவிட்டதென்று அயேஷா கண்டாள். வைத்தியர் கையில் மருந்துடன் தயாராக இருந்தார். இந்தச் சேஷ்டைகளைப் பார்த்ததும், தன் கை விரலால் மருந்தையெடுத்து, நோயாளியின் வாயில் தடவினார். மருந்து உதட்டிற்கு வெளியே வந்துவிட்டது; கொஞ்சந்தான் வயிற்றிற்குள் போயிற்று. உடனே நோயாளியின் அவஸ்தை மாறிற்று. முகத்தில் ரத்த ஓட்டம் ஏற்பட்டு வெளுப்பு மாறியது; மூடின கைகள் திறந்தது; கண்களும் சுபாவமாக ஆயின; வைத்தியர் மிகவும் ஆவலுடன் கையைப் பிடித்துப் பார்த்தார். வெகுநேரம் பரீக்ஷை செய்த பிறகு சந்தோஷத்துடன், "இனிமேல் பயமில்லை; காப்பாற்றிவிடலாம்!" என்றார்.

"ஜுரம் விட்டுவிட்டதா?" என்று உஸ்மான் கேட்டான்.

"விட்டுவிட்டது" என்றார் வைத்தியர்.

அயேஷா, உஸ்மான் இருவர் முகங்களும் மலர்ந்தன.

"இனிமேல் ஒன்றும் கவலைப்படவே வேண்டியதில்லை. ஆகையால் நான் இனிமேல் இங்கே இருக்க வேண்டுமென்ற அவசியமும் இல்லை. இந்த மருந்தை இரவு ஒரு நாழிகைக்கு ஒரு தடவையாக உள்ளே கொடுக்க வேண்டும்" என்று சொல்லிவிட்டு ஹகீம் வீட்டிற்குச் சென்றார். இன்னும் அங்கே நின்றிருந்த உஸ்மானும் சிலரும் கொஞ்சம் நேரம் கழித்து வீட்டிற்குச் சென்றார்கள். அயேஷா முன் போலவே கட்டிலில் உட்கார்ந்து கொண்டு மருந்து கொடுப்பது முதலிய சேவையில் ஈடுபட்டாள்.

இரவு இரண்டாம் ஜாமத்திற்குக் கொஞ்சம் முன்னால் ராஜகுமாரன் கண்ணைத் திறந்து பார்த்தான் உடனே அவன் கண்ணில் தென்பட்டது அயேஷாவின் அழகு மலர்ந்த முகந்தான். அவன் சுயப்பிரக்ஞை இன்னும் வரவில்லையென்றும், நினைவை அடைய அவன் முயற்சி செய்தது பியோஜனப்படவில்லை என்றும் அவனுடைய முகப்பார்வையிலிருந்து அயேஷா அறிந்து கொண்டாள். வெகுநேரம் கழித்து அவன் அயேஷாவைப் பார்த்து, "நான் எங்கே இருக்கிறேன்?" என்று கேட்டான். அந்த இரண்டு நாளில் அவன் முதன்முதலாகக் கேட்ட கேள்வி அதுதான்.

"கத்லுகானின் கோட்டையில்" என்று அயேஷா பதில் சொன்னாள்.

மறுபடியும் ராஜபுத்திரன் ஏதோ நினைத்துப் பார்த்துக் கொண்டான். திரும்பவும் கொஞ்சநேரம் கழித்து, "நான் இங்கே எப்படி வந்தேன்?" என்று கேட்டான்.

அயேஷா முதலில் ஒன்றும் பதில் சொல்லவில்லை; பிறகு, "நீங்கள் உடம்பு நோயுற்றிருக்கிறீர்கள்" என்றாள்.

ராஜபுத்திரன் ஏதோ நினைத்துக் கொண்டவனாய்த் தலையை அசைத்து, "இல்லை, இல்லை; நான் இங்கே கைதியாயிருக்கிறேன்" என்றான்.

இதைச் சொல்லிக் கொண்டிருக்கும்பொழுதே ராஜபுத்திரன் முகத்தில் மாறுதல் ஏற்பட்டது. அயேஷா பதில் சொல்லவில்லை. ராஜபுத்திரனுக்கு பழைய நினைவு நன்றாக வந்துவிட்டதென்பதைக் கண்டாள்.

இன்னும் கொஞ்ச நேரம் கழித்து ராஜபுத்தின் மறுபடியும் "நீ யார்?" என்று கேட்டான்.

"நான் அயேஷா"

"அயேஷா யார்?"

"கத்லுகானின் மகள்".

மறுபடியும் சிறிதுநேரம் மௌனமாக இருந்தான். சேர்ந்தாற்போல் அதிகம் பேச முடியவில்லை அவனால். சிறிதுநேரம் மௌனமாகச் சிரமபரிகாரம் செய்து கொண்டுவிட்டு, "நான் எவ்வளவு நாளாக இங்கே இருக்கிறேன்?" என்று கேட்டான்.

"நாலு நாளாக".

"மாந்தாரணக் கோட்டை இன்னும் உங்கள் வசம் தானே இருக்கிறது?"

"ஆமாம்".

ஜகத்சிங் மறுபடியும் கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொண்டு, "வீரேந்திரசிங்கின் கதி என்னவாயிற்று?" என்று கேட்டான்.

"வீரேந்திரசிங் சிறையிலிருக்கிறார். இன்று விசாரணை?"

ஜகத்சிங்கின் வெளுத்த முகம் பின்னும் வெளுத்தது. "இன்னும் வேறு யாராவது நகரவாசிகளுக்கு ஆபத்து உண்டா?"

அயேஷா வருத்தமடைந்தாள்; "முழு விவரமும் தெரியவில்லை" என்றாள்.

ராஜபுத்திரன் தனக்குத்தானே ஏதோ சொல்லிக் கொண்டான். அவன் வாயிலிருந்து ஒரு வார்த்தை நன்றாக வெளிவந்தது. அது 'திலோத்தமா' என்று அயேஷா காதில் பட்டது.

அயேஷா மெள்ள எழுந்திருந்து வைத்தியர் கொடுத்துவிட்டுப் போன மருந்தை எடுப்பதற்காகப் போனாள். அவளது நிகரற்ற ரூப சௌந்திரியத்தை ராஜபுத்திரன் கவனித்தான். அயேஷா மருந்தைக் கொண்டு வந்தாள். ராஜபுத்திரன் அதைக் குடித்துவிட்டு, நோயின் கொடுமையால் ஏற்பட்ட கனவில், "நான் ஒரு தேவகன்னிகை எனக்குச் சிச்ரூஷை செய்வதாகக் கண்டேன். அந்த ஸ்திரீ திலோத்தமையா?" என்றான்.

"நீங்கள் திலோத்தமையைக் கனவில்தான் கண்டிருக்க வேண்டும்" என்றாள் அயேஷா.

## நான்காம் அத்தியாயம்

## படுதாப் பெண்

பட்டாணியர் கோட்டையைக் கைப்பற்றி இரண்டு நாட்கள் கழிந்ததும், கத்லுகான் கோட்டையில் தர்பார் ஒன்று நடத்தினான். இரண்டு பக்கங்களிலும் சபையோர் வரிசையாக நின்று கொண்டிருந்தனர். முன்னால் ஆயிரக்கணக்கான ஜனங்கள் நிசப்தமாகக் கூடியிருந்தார்கள்.

ஆயுதபாணியான காவலாளி ஒருவன் விலங்கிடப்பட்டிருந்த வீரேந்திரசிங்கைத் தர்பாருக்குக் கொண்டு வந்தான் வீரேந்திரசிங்கின் முகம் ரத்தம்போல் சிவந்திருந்தது. ஆனால் அவர் பயங்கொள்ளவில்லை. கண்களிலிருந்து கோபாக்கினிப் பொறி பறந்து கொண்டிருந்தது, நாசி விரிந்த கோபத்தில் துடித்துக் கொண்டிருந்தது. உதட்டைக் கடித்துக் கொண்டார். கத்லுகானின் முன்பு கொண்டு வரப்பட்டவுடன், கத்லுகான் அவரைப் பார்த்து, "வீரேந்திரசிங்! உமது அபராதத்திற்கு இப்பொழுது தண்டனை விதிக்கப் போகிறோம். நீர் எதற்காக நாம் சொன்னபடி செய்யவில்லை?" என்று கேட்டான்.

மூண்டெழுந்த தம் கோபத்தை அடக்கிக் கொண்டு வீரேந்திரசிங், "நீ சொன்ன எதைச் செய்யவில்லை? அதை முதலில் சொல்லும்" என்றார்.

சபையோரில் யாரோ ஒருவன், "வணக்கமாகப் பதில் சொல்லும்" என்றான்.

"ஏன் நமக்குச் சேனையும் பணமும், நாம் கேட்டபடி, அனுப்ப மறுத்தீர்?"

வீரேந்திரசிங் பயமென்பது சிறிது அற்றவராய், "நீர் ராஜத்துரோகம் செய்த ஓர் அடிமை. உமக்கேன் நான் பணம் அனுப்ப வேண்டும்? சேனை அனுப்ப வேண்டும்?"

வீரேந்திரர் தம் கட்டுகளை மீற முயன்றதை எல்லோரும் கண்டார்கள்.

கத்லுகானின் உடம்பு கோபத்தால் துடிதுடித்தது; ஆனால் அவன் உடனே கோபத்தை அடக்கிக் கொண்டு, "நம் எல்லையில் இருந்து கொண்டு நீர் ஏன் மொகலாயருடன் சேர்ந்து கொண்டீர்?" என்று கேட்டான்.

"உமது அதிகாரம் எதுவரையில்?"

கத்லுகானுக்கு மறுபடியும் கோபம் வந்தது.

"துஷ்டா! உன் செயலுக்கேற்ற பலனை அனுபவிக்கிறாய். உன் உயிரில் நீ இனிமேல் ஆசை வைக்காதே. உன் கர்வத்தாலேயே உனக்கு நாசத்தைத் தேடிக் கொண்டாய்".

வீரேந்திரசிங் கர்வத்துடன் சிரித்தார்.

"கத்லுகான்! உன் தயையை எதிர்பார்த்து நான் இங்கே உன்முன் கைதியாக நிற்கவில்லை. உன்னைப் போன்ற சத்துருவிடமா நான் தயை எதிர்பார்ப்பேன்? அப்பேர்ப்பட்ட என் உயிர் இருந்தென்ன உபயோகம்? உனக்கு ஆசீர்வாதம் செய்துவிட்டு நான் பிராணத்தியாகம் செய்திருப்பேன்; ஆனால் நீ என் மாசற்ற குலத்தைக் கெடுத்துவிட்டாய். என் உயிருக்கும் மேலான..."

வீரேந்திரரால் மேலே பேசமுடியவில்லை. நெஞ்சு அடைத்துக் கொண்டது; கண்கள் மங்கிவிட்டன. பயமென்பதையே அறியாத வீரேந்திரர் தலை குனிந்து கொண்டு அழ ஆரம்பித்தார்.

கத்லுகான் சுபாவத்திலேயே கல்மனதுடையவன்; பிறர் படும் துன்பங்கள் எல்லாம் அவனுக்குத் தமாஷாக இருக்கும். அப்பேர்ப்பட்ட சத்துரு, வீரேந்திரசிங், கலங்கித் தன் முன் நிற்பதைக் கண்ட அவன் சந்தோஷமடைந்தான்.

"நீ என்னிடம் ஏதாவது கேட்டுக் கொள்ள வேண்டியிருந்தால் சொல்லு; உன் அந்திய காலம் கிட்டிவிட்டது".

தாபம் மிகுந்த அவர் இதயத்திற்கு அழுதது கொஞ்சம் ஆறுதலாக இருந்தது.

"ஒன்றும் வேண்டியதில்லை; ஒரே ஒரு பிரார்த்தனைதான். என் கொலைக் காரியத்தை விரைவில் முடி".

"அது தானாக ஆகும். உனக்கு வேண்டியது வேறொன்றும் இல்லையா?"

"இந்த ஜென்மத்திலே வேறொன்றுமில்லை."

"சாகும் தறுவாயில உன் பெண்ணைப் பார்க்க வேண்டாமா உனக்கு?"

இந்தக் கேள்வியைக் கேட்டதும் சபையிலிருந்தவர்கள் இரக்கம் மேலிட்டு மௌனமாக இருந்தார்கள். வீரேந்திரரின் கண்களில் மறுபடியும் தீப்பொறி பறந்தது.

"என் பெண் உன் வீட்டில் உயிருடன் இருந்தால் நான் அவளைப் பார்க்க வேண்டியதில்லை. செத்துப் போயிருந்தால் கொண்டு வா; பார்த்துவிட்டுச் சாகிறேன்!"

சபையில் நிசப்தம் குடிகொண்டது. ஊசி விழுந்தாலும் கேட்கும்படி அவ்வளவு ஆழ்ந்த மௌனம்! நவாபின் மனத்தை ஊகித்த வேலையாட்கள் வீரேந்திரரைக் கொலைக் களத்திற்கு அழைத்துக் கொண்டு சென்றார்கள். அப்படி அழைத்துக் கொண்டு போகப்படுவதற்குச் சற்றுமுன், யாரோ ஒரு முஸல்மான் அவர் காதில் ஏதோ சொன்னான். ஆனால் அது அவருக்கு அர்த்தமாகவில்லை. அவன் அவர் கையில் ஒரு கடிதத்தைக் கொடுத்தான். வீரேந்திரர் வேறு எதையோ யோசித்துக் கொண்டே கடிதத்தைப் பிரித்துப் பார்த்தார். விமலா எழுதிய கடிதமாக இருந்தது. மகா வெறுப்புடன் கடிதத்தைத் தூக்கி தூர எறிந்தார். கடிதமெடுத்து வந்தவன் அதைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு போய்விட்டான். வீரேந்திரர் செய்ததைக் கண்டு அருகில் இருந்த ஒருவன், "பெண்ணின் கடிதம்!" என்றான்.

அது வீரேந்திரர் காதில் பட்டது. அந்தப் பக்கம் திரும்பி, "யார் என் பெண் என்கிறார்கள்? என் பெண் அல்ல!" என்றார்.

கடிதமெடுத்து வந்தவன் அதை எடுத்துக் கொண்டு போகிற பொழுது, காவலாளிகளைப் பார்த்து, "நான் திரும்பி வரும்வரை தாமதம் செய்யுங்கள்" என்று சொல்லிவிட்டுப் போனான்.

"பிரபுவின் உத்தரவுப்படி" என்றார்கள் காவலாளிகள்.

உஸ்மான்கான் கடிதம் கொண்டு வந்தவன். அவனைத்தான் காவலாளிகள் பிரபு என்றார்கள்.

உஸ்மான் கடிதத்துடன் அந்தப்புரத்திற்குள் சென்றான். அங்குள்ள பொழிலில் ஒரு மகிழ மரத்தடியில் ஒரு மூகமுடி அணிந்த பெண் நின்று கொண்டிருந்தாள். உஸ்மான் அவளிடம் சென்று, நாலு பக்கங்களிலும் பார்த்துவிட்டு, நடந்த யாவற்றையும் சொன்னான்.

"உனக்கு அதிகம் சிரமம் கொடுக்கிறேன். ஆனால் உன்னால்தான் எங்களுக்கு இந்த நிலைமை வந்தது. நீ எனக்கு இந்தக் காரியத்தை எப்படியாவது சாதித்துக் கொடுக்க வேண்டும்" என்றாள் அந்தப் பெண்.

உஸ்மான் மௌனமாக நின்றான்.

மனோவேதனையால் நடுங்கிய குரலுடன் அந்தப் பெண், "செய்யாவிட்டால், செய்து கொடுக்காவிட்டால், - நான் இப்பொழுது அநாதை! – ஆனால் கடவுள் இருக்கிறார்" என்றாள்.

"அம்மா, உங்களுக்குத் தெரியாதா, எப்பேர்ப்பட்ட சிரமமான காரியம் நீங்கள் சொல்லுவது என்று? கத்லுகானுக்குத் தெரிந்தால் என் உயிர் போய்விடும்".

"கத்லுகானா? என்னை ஏன் ஏமாற்றுகிறாய்? கத்லுகான் உன்னை ஒன்றும் செய்ய முடியாது".

"இருக்கட்டும். வாருங்கள்; நான் உங்களைக் கொலைக்களத்திற்கு அழைத்துக் கொண்டு போகிறேன்".

அவள் உஸ்மானைப் பின்தொடர்ந்து கொலைக்களத்திற்குச் சென்று, அங்கே அசைவற்று நின்றுவிட்டாள். வீரேந்திரர் அவளைப் பார்க்கவில்லை; பைராகி வேஷம் கொண்ட ஒரு பிராம்மணனுடன் அவர் பேசிக் கொண்டிருந்தார். விமலா திரையின் வழியாகப் பார்த்தபொழுது அவர் அபிராமஸ்வாமியாக இருக்க கண்டாள்.

வீரேந்திரசிங் அபிராமஸ்வாமியிடம், "குரு தேவ! விடை பெற்றுக் கொள்ளுகிறேன். உங்களிடம் நான் வேறென்ன சொல்வது? இனிமேல் நான் இவ்வுலகில் வேண்டுவது ஒன்றுமில்லை" என்றார்.

அபிராமஸ்வாமி பின்னால் நின்ற படுதாப் பெண்ணை அவருக்குச் சுட்டிக் காட்டினார். வீரேந்திரசிங் திரும்பிப் பார்த்தார். படுதாப் பெண் திரையையெடுத்துத் தூர எறிந்து விட்டு, அவருடைய விலங்கிட்ட காலடியில் வந்து விழுந்தாள். தழுதழுத்த குரலில் வீரேந்திரர், "விமலா!" என்றார்.

"நாதா! விராணேசுவரா!" என்று கதறிக் கொண்டு விமலா வெறி கொண்டவள் போலக் கத்தினாள். "இன்று நான் உலகத்தின் முன் அவ்விதம் சொல்லுகிறேன். யார் என்னைத் தடுக்க முடியும்? பிரபோ! பிராணபதி! எங்கே போகிறீர்கள்? எங்களை எங்கே விட்டுச் செல்கின்றீர்கள்?"

வீரேந்திரசிங்கின் கண்களிலிருந்து ஜலம் மளமளவென்று பெருகிற்று. கையைப் பிடித்துக்கொண்டு, "விமலா! பிரியே! இப்பொழுது நான் எதற்காக அழுகிறேன்? சத்துருக்கள் பார்த்தால் நான் சாவிற்குப் பயந்து அழுகிறேன் என்றல்லவா நினைப்பார்கள்" என்றார்.

விமலா அசைவற்றுப் போனாள். வீரேந்திரர் மறுபடியும், "விமலா! நான் போகிறேன்! நீ பின்னால் வா!" என்றார்.

"வருகிறேன்!" என்றாள் விமலா.

வேறுயார் காதிலும் படாதபடி மெதுவான குரலில், "வா, ஆனால் முதலில் சத்துருவைப் பழி வாங்க வேண்டும்" என்றார்.

அணைவதற்குமுன் அதிக வெளிச்சம் பெறும் விளக்குப் போல வீரேந்திரர் முகம் பிரகாசித்தது.

"உன்னால் முடியுமா?"

விமலா வலது கையில் மோதிரத்தை இட்டு, "இதே கையால்! அதனுடைய நகைகளைக் கழற்றி விடுகிறேன். வேறு என்ன காரியம் எனக்கு?" என்று சொல்லிக் கொண்டு வளை முதலியவைகளைக் கழற்றித் தூர எறிந்தாள்.

வீரேந்திரர் சந்தோஷத்துடன், "உன்னால் முடியும்! ஈசுவரன் உனக்குத் துணைபுரிவார்!" என்றார்.

காவலாளி, "இனிமேல் தாமதம் செய்ய முடியாது" என்றான்.

வீரேந்திரசிங் விமலாவைப் பார்த்து, "இன்னும் என்ன? நீ எங்காவது போ!" என்றார்.

"இல்லை. இங்கே, எதிரேயே, நான் விதவையாக வேண்டும். உங்களுடைய ரத்தத்தைப் பார்த்து என் மனம் கல்லாக வேண்டும்!" என்று பயங்கரமான குரலில் விமலா கத்தினாள்.

"அப்படியே ஆகட்டும்!" என்று சொல்லிவிட்டு வீரேந்திரர் கொலையாளிக்குச் சமிக்ஞை செய்தார்.

மேலே எழுந்து கடுமையாகப் பொசுக்கும் சூரியனைத் தலையெடுத்துப் பார்த்தாள் விமலா. அவள் கண்கள் ஒரு நிமிஷம் தாமாகவே மூடிக் கொண்டன. கண் திறந்து பார்த்தாள். வீரேந்திரரின் தலை ரத்தம் தோய்ந்த பூமியில் உருண்டு கிடந்தது.

விமலா பதுமைபோல நின்றாள். கை கால் ஆடவில்லை. கண்ணில் ஒரு பொட்டு ஜலமும் வரவில்லை. அறுபட்டுக் கிடந்த தலையையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

## ஐந்தாம் அத்தியாயம்

## விதவை

திலோத்தமை எங்கே? தந்தையை இழந்து, திக்கற்றுப் போன பெண் எங்கே? விமலா எங்கே இருந்தாள்? எங்கிருந்து வந்து கொலைக்களத்தில், கணவனின் முன் தோன்றி, அவரைத் தரிசித்தாள்? அதற்குப் பிறகு அவள் எங்கே சென்றாள்?

ஏன் சாகும்பொழுது, வீரேந்திரர் தன் பிரிய குமாரியைப் பார்க்கவில்லை? ஏன் அவள் பேரைக் கேட்டபொழுதே எரிந்து விழுந்தார். என் பெண் அல்ல என்று எதற்காகச் சொன்னார்? ஏன் விமலாவின் கடிதத்தைப் படிக்காமல்கூட விட்டெறிந்தார்? எதற்காக? கத்லுகானை வீரேந்திரசிங் நிராகரித்ததும், அதனால் ஏற்பட்ட பயங்கரமான விளைவுகளா காரணம்?

"தூய்மையான என் குலத்தில் அழுக்கேற்படுத்தி விட்டாய்!" என்று சொல்லி விலங்கிடப்பட்ட புலி கர்ஜித்தது.

விமலாவும் திலோத்தமையும் எங்கே, சொல்லுங்கள் பார்ப்போம்! கத்லுகானின் மனைவிகள் வசிக்கும் அந்தப்புரத்தில் பார்த்தால் தென்படுவார்கள்.

வாழ்க்கையின் போக்கு இது! அதிருஷ்ட சக்கரத்தில் ஈவிரக்கமற்ற சுழல்! ரூபம், யௌவனம், தூய்மை எல்லாம் சக்கரத்தின் சுழலில் அகப்பட்டுக் கொண்டு நசுங்கிப் போகின்றன.

தான் ஜயிக்கும் கோட்டை, கிராமம் முதலியவைகளில் யாரேனும் அழகான பெண்மணிகள் கைதிகளாக இருந்தால் அவர்களைத் தன் சேவைக்காக வைத்துக் கொண்டு விடுவது கத்லுகானின் வழக்கம். மாந்தாரணக் கோட்டையைப் பிடித்த மறுநாள், கத்லுகான் கைது செய்து வைக்கப்பட்டிருந்தவர்களை விசாரித்துப் பைசல் செய்வது, கோட்டையின் காப்பிற்காக வேண்டிய சேனையை ஏற்பாடு செய்வது, முதலிய காரியங்களில் ஈடுபட்டான். கைதிகளிடையே விமலாவையும் திலோத்தமையையும் கண்டதும் அவர்களைத் தன்னுடைய விலாஸ விடுதிக்கு அனுப்பிவிட்டான். அதன் பிறகு வேறு சில முக்கியமான விஷயங்களைக் கவனிக்கச் சென்றான்.

ஜகத்சிங் கைதியானதைக் கேள்விப்பட்டு அருகேயிருந்த ராஜபுத்திர சைனியம் படையெடுத்து வந்தது ஆகையால் அதை வெருட்டியடிக்க வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய கத்லுகான் மும்மரமாக இருக்க வேண்டியதாகி விட்டது. பெண்களுடனே சரசசல்லாபம் செய்ய அவனுக்குச் சாவகாசம் ஏற்படவில்லை.

விமலாவும் திலோத்தமையும் தனித்தனி அறையில் வைக்கப்பட்டிருந்தார்கள். தந்தையை இழந்த அந்த யுவதியின் தேகம் எப்படி அழுக்கடைந்து பூமியில் கிடந்தது என்பதை நாம் ஏன் பார்க்க வேண்டும்? யார்தான் அப்பேர்ப்பட்ட திலோத்தமையைப் பார்ப்பார்கள்? இளவேனிற் காலத்துப் பூங்கொடி இளங்காற்றில் இங்குமங்குமாகத் துவளும்பொழுது யார்தான் அதன் அருகே சென்று நின்று கொண்டிருக்கமாட்டார்கள்? கோடைக்காலத்துக் காற்றில் படர்ந்த மரத்துடன் கீழே விழுந்து கிடக்கும் கொடியை யார் சீந்துவார்கள்?

விமலாவைப் பார்ப்போம். அவள் எப்படியிருக்கிறாள்? தமாஷும், சாதுரியமும், சுறுசுறுப்பும் பொங்கிய சுபாவத்துடனிருந்த விமலா, இரக்கப்படும்படியாக, விதவைக் கோலத்தில் கண்களில் நீர் வடிய ஏங்கிக் கொண்டு கிடந்தாள்.

அவளுடைய தலைமயிர் கோதிக்கூட முடியப்படவில்லை. தலையெல்லாம் புழுதி. ஆபரணங்களெல்லாம் ஒன்றுகூட இல்லை. கட்டியிருந்த துணியோ அழுக்கடைந்திருந்தது. ஏன் இந்தக் கோலம்? கடைக்கண் அழகு எங்கே? தலையில் என்ன காயம்? ரத்தம் வழிந்து கொண்டிருக்கிறது!

விமலா உஸ்மானை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

உஸ்மான் பட்டாணியர்களுள் திலகம் போன்றவன். யுத்தம் அவனுக்குத் தன் காரியத்தை முடிப்பதற்கு ஒரு சாதனம். அதில் வெற்றி பெறுவதற்காக அவன் எதுவேண்டுமானாலும் செய்யத் துணிந்து விடுவான். ஆனால் தன் காரியம் முடிந்துவிட்டால், தோல்வியடைந்தவர்களிடம் உபயோகமின்றிக் கொஞ்சங்கூட அக்கிரமமாக நடந்துகொள்ள மாட்டான். அவன்தான் விமலாவிடம் கருணைக் கொண்டு அவளைக் கொலைக்களத்திற்கு அழைத்துச் சென்றான். அவள் வீரேந்திரசிங்கின் பத்தினியென்று அறிந்ததும் அவன் பரிதாபம் இன்னும் அதிகமாயிற்று. உஸ்மான் கத்லுகானுடைய சகோதரன் மகன்; சரித்திரப்படி மகன் ஆகையால் அந்தப்புரத்தில் எங்கே வேண்டுமானாலும் போக அவனுக்கு உரிமை இருந்தது கத்லுகானின் மனைவிகள் (உப பத்னிகள்) இருக்குமிடத்திற்கு அவனுடைய புத்திரர்கள்கூடப் போகக்கூடாது. அப்படியானால் உஸ்மானும் போகக்கூடாதல்லவா? ஆனால் உஸ்மான் கத்லுகானின் வலது கை. அவனின்றி ஆமோதர நதிக்கரைவரை அவன் அதிகாரம் பரவியிராது. ஆகையால்தான் அவனுக்கு அவ்வளவு சலுகை.

வீரேந்திரன் மறைவுக்கு இரண்டு நாட்கள் முன் விமலா தன்னிடமிருந்த பாக்கி நகைகளையெல்லாம் கழற்றிக் கத்லுகான் நியமித்திருந்த வேலைக்காரியிடம் கொடுத்து விட்டாள்.

உடனே வேலைக்காரி, "நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டாள்.

"நீ ஒரு தரம் உஸ்மானிடம் போய்வந்ததுபோல மறுபடியும் போ. நான் இன்னொரு முறை அவரைக் காண வேண்டுமென்று கேட்டுக் கொண்டதாகச் சொல்; இதுதான் கடைசித் தடவையென்றும் இனிமேல் சிரமப்படுத்துவதில்லையென்றும் சொல்".

வேலைக்காரி அதேமாதிரி செய்தாள். "மஹாலுக்குள் நான் அவளிடம் போய் வருவது இருவருக்கும் சங்கடம் அவளை நான் இருக்குமிடத்திற்கு வரச்சொல்" என்று உஸ்மான் சொல்லியனுப்பினான்.

"நான் எப்படிப் போவது?" என்று விமலா கேட்டாள் வேலைக்காரியை.

"அதற்கு வேண்டிய உபாயத்தைத் தான் செய்வதாகச் சொன்னார்" என்றாள் வேலைக்காரி.

இருட்டிய பிறகு, அயேஷாவின் வேலைக்காரி ஒருத்தி வந்து விமலாவை உஸ்மானிடம் கூட்டிக் கொண்டு போனாள்.

"இன்னும் எந்த விதத்தில் நான் உங்களுக்கு உதவி செய்யக்கூடும்?" என்று உஸ்மான் கேட்டான்.

"ஒரு சின்னத் தகவல்; அவ்வளவுதான். ராஜபுத்திர வீரர் ஜகத்சிங் உயிருடன் இருக்கிறாரா?"

"இருக்கிறார்".

"கைதியாக இருக்கிறாரா? அல்லது விடுதலை பெற்று விட்டாரா?"

"கைதியாக இருக்கிறார். ஆனால் சிறைச்சாலையில் இல்லை. உடம்பில் காயங்கள் ஏற்பட்டுவிட்டதால் நோயுற்றுப் படுத்த படுக்கையிலிருக்கிறார். கத்லுகானுக்குத் தெரியாமலேயே அவரை அந்தப்புரத்திலேயே வைத்திருக்கிறேன்".

"துரதிருஷ்டம் பிடித்த எங்களுடன் சேர்ந்ததால் அவருக்கு இவ்வளவு கஷ்டம்! கடவுள் செயல்! எந்த நிமிஷம் ராஜபுத்திரன் குணமடைந்து எழுந்திருக்கிறாரோ அப்பொழுது அவரிடம் இந்தக் கடிதத்தைச் சேர்ப்பிக்க வேண்டும் அதுவரையில் உங்களிடமே இருக்கட்டும். இதுதான் என் பிரார்த்தனை".

"நான் அப்படிச் செய்வது உசிதமாகாது. எப்படியானாலும் ராஜபுத்திரன் கைதி. கைதிக்கு நான் யாதொரு கடிதமும் கொண்டு போய் கொடுக்கக்கூடாது. அது என் யஜமானனுடைய உத்தரவிற்கு விரோதமாகும்"

"இந்தக் கடிதத்தில் உங்களுக்குக் கெடுதல் உண்டாக்கும் விஷயம் ஒன்றுமே இல்லை. ஆகையால் இதில் கெடுதல் ஒன்றுமில்லை... யஜமானர் கட்டளையா? உங்களுக்கு நீங்களே யஜமானர்!"

"வேறு ஏதாவது விஷயத்தில் நான் என் சிற்றப்பனின் கட்டளைக்கு விரோதமாக நடக்கலாம் ஆனால் இதில் மட்டும் சாத்தியமில்லை. இதில் எங்களுக்குப் பாதகமாக ஒன்றுமில்லை என்கிறீர்கள். அதை நான் நம்புகிறேன். ஆனால் இந்த விஷயத்தில் நான் ஒன்றும் செய்வதற்கில்லை; என்னால் முடியாது".

"நீங்கள் இதை வாசியுங்கள். அப்படியானால்..." என்று விமலா மனவருத்தத்துடன் கூறினாள்.

உஸ்மான் கடிதத்தை வாங்கிப் படிக்க ஆரம்பித்தான்.

## ஆறாம் அத்தியாயம்

## விமலாவின் கடிதம்

"ராஜகுமாரா!"

என்றாவது என்னைப் பற்றிய வரலாற்றை உங்களிடம் சொல்லுகிறேன் என்று வாக்குறுதி கொடுத்தேனல்லவா? அதற்குச் சமயம் இப்பொழுது வந்துவிட்டது; சொல்லுகிறேன்:

நம் திலோத்தமை அம்பர வம்சத்து ராணியாகிச் சிம்மாஸனம் ஏறிய பிறகு அதை வெளியிடலாமென்று எண்ணியிருந்தேன். அந்த எண்ணங்கள் யாவும் நிர்மூலமாகிவிட்டன. இன்னும் சில தினங்களுக்குள் பூமியில் திலோத்தமையென்றும், விமலாவென்றும் இருவர் இருந்ததாகவே தெரியாமறபோகும் என்பது இப்பொழுது நிச்சயமாகிவிட்டது. எங்களுடைய வாழ்நாட்கள் இனிமேல் மிகவும் சுருக்கந்தான்.

ஆகையால்தான் நான் உங்களுக்கு இந்தக் கடிதம் எழுதுகிறேன். நான் மகாபாபி; பல கெட்ட காரியங்கள் செய்திருக்கிறேன்; நான் செத்துப்போன பிறகு உலகம் என்னைத் திட்டும்; என்னைப் பற்றி அவதூறாகப் பேசும்; அப்பொழுது என் பெயரைச் சுற்றியிருக்கும் களங்கத்தை யாரால் அகற்ற முடியும்? அப்பேர்ப்பட்ட புண்ணிய வந்தர்கள் யார் இருக்கிறார்கள்?

ஒரு பெரியார் இருக்கிறார். அவர் கூடிய சீக்கிரம் உலகத்தையே துறந்து தவம் செய்யச் செல்லக்கூடும் அபிராமஸ்வாமிகள் மூலமாக எனக்குக் காரியம் கைகூடச் சாத்தியமில்லை. ராஜகுமாரா! உங்களுடைய அந்தரங்கமான பரிஜனத்தில் ஒருத்தியாக ஆகக் கூடுமென்று நான் ஒரு சமயம் நினைத்ததுண்டு. என்றாவது ஒருநாள் நீங்கள் எனக்கு ஒரு காரியம் செய்ய வேண்டும். யாரிடந்தான் நான் சொல்லிக் கொள்வேன்? பாவியான என் துரதிருஷ்டம், நெருப்பைப் போல, பந்துக்கள் நெருங்கினால் அவர்களையும் சேர்த்துப் பொசுக்கி விடும். எப்படியானாலும், அடியேனுடைய இந்தப் பிரார்த்தனையை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும் உலகம், விமலா ஓர் ஒழுங்குதவறிய ஸ்தீரீ; விமலா வேலைக்காரி வேஷம் கொண்ட தாசி என்று சொல்லும் போதெல்லாம் நீங்கள், விமலா கீழ்ஜாதியில் பிறந்தவள்; விமலா அதிருஷ்டமற்றவள் அவள் செய்த பிசகுகள் அவளாகச் செய்தவையல்ல; விமலா தாசியல்ல. இன்று மாண்ட வீரேந்திரர் அவளைச் சாஸ்திரோக்தமாகப் பாணிக்கிரகணம் செய்தவர். அவள் தன் பதிக்கு ஒருபொழுதும் துரோகம் செய்ததில்லை என்று சொல்ல வேண்டும்.

இதுவரையில் வெளியில் வராத இந்த வரலாற்றை யார் நம்புவார்கள்? எதற்காக, நான் வீரேந்திரருடைய பத்தினியாக இருந்து கூடத் தாசிபோல இருந்தேன் என்ற விவரத்தைக் கேளுங்கள்.

மாந்தாரணக் கோட்டைக்கு அருகேயுள்ள ஒரு கிராமத்தில் சசிசேகர பட்டாச்சாரியர் என்று ஒருவர் வசித்து வந்தார். அவர் ஒரு நல்ல அந்தஸ்துள்ள பிராம்மணரின் புத்திரர். சிறு பிள்ளையாக இருக்கும் பொழுது விதிப்படி கல்வி கற்றார். ஆனால் கல்வியினால் இயற்கையாக அவருக்கிருந்த ஒரு குணம் மாறவில்லை. ஈசுவரன் சசிசேகருக்கு எல்லா நல்ல குணங்களையும் கொடுத்து, ஒரு கெட்ட குணத்தையும் மிகையாகவே கொடுத்திருந்தான். அது வாலிப தசைக்கென்றே ஏற்பட்ட பிரபலமான குணதோஷந்தான்.

மாந்தாரணத்தில் ஜயதரசிங்கின் சேவகன் ஒருவனுடைய குடும்பத்தில், கணவனைப் பிரிந்த பெண் ஒருத்தி இருந்தாள். அவளுடைய அழகு அசாதாரணமானது. அவளுடைய கணவன் ராஜசேனையில் ஒரு சிப்பாய்; ஆகையால் பெரும்பாலும் ஊரிலேயே இருக்க மாட்டார். அந்த அழகி சசிசேகரருடைய கண்ணில் பட்டாள். வெகு சீக்கிரத்தில் இருவருக்கும் சம்பந்தம் ஏற்பட்டு அந்தப் பெண் கர்ப்பவதியானாள்.

நெருப்பையோ பாப காரியத்தையோ அதிக காலம் இரகசியமாக மூடி வைக்க முடியாது. சசிசேகரர் செய்த காரியம் அவருடைய தந்தையின் காதில் பட்டது. தம் மகன் செய்த அக்கிரமத்தை மறைப்பதற்காக அவர், அப்பெண்ணின் புருஷனை உடனே வீடு திரும்பும்படி ஏற்பாடு செய்துவிட்டார். பிள்ளையையும் பலமாகக் கண்டித்தார். சசிசேகரர் கெட்ட பெயருடன் ஊரைவிட்டு வெளியேறினார்.

சசிசேகரர் தந்தையின் வீட்டைவிட்டுக் கிளம்பிக் காசிக்குப் போய் சேர்ந்தார். அங்கே மகாசாஸ்திர நிபுரணராயிருந்த ஒரு பண்டிதரின் புகழைக் கேள்விப்பட்டு, அவரிடம் போய் அத்தியயனம் செய்ய ஆரம்பித்தார்; வெகு புத்திசாலி; தரிசனங்கள் முதல் எல்லாவற்றையும் நன்றாக அறிந்தார்; ஜோதிஷத்தில் நிகரற்ற மகாமகோபாத்தியாயர் ஆகிவிட்டார். குரு மிகவும் திருப்தியடைந்தவராய்ப் பாடம் கற்பித்தார்.

சசிசேகரர் ஒரு சூத்திரப் பெண் குடியிருந்த வீட்டின் அருகே இருந்தார். அவளுக்கு ஓர் இளம்பெண் இருந்தாள். பிராம்மணரிடத்தில் பக்தி கொண்டவளாய் அந்தப் பெண் சசிகேரர் வீட்டுக் காரியங்களையெல்லாம் செய்துவந்தாள். அதிகம் சொல்வானேன்? சசிசேகரருக்கு அவளுடைய வயிற்றில் நான் பிறந்தேன்.

இதைக் கேள்விபட்டதும் குரு சிஷ்யனைப் பார்த்து, 'சிஷ்யா! அக்கிரமஸ்தன் என்னிடம் அத்தியயனம் செய்ய முடியாது. நீ இனிமேல் காசியிலேயே இருக்கக்கூடாது?' என்றார்.

சசிசேகரர் வெட்கிக் காசியை விட்டுக் கிளம்பினார்.

என் பாட்டனார் என் தாயினுடைய நடத்தையைக் கண்டித்து அவளை வீட்டைவிட்டு வெளியே துரத்திவிட்டார்.

என் தாய் என்னுடன் ஒரு குடிசையில் வசித்து வந்தாள்; கூலி வேலை செய்து உழைத்துக் காலம் தள்ளினாள். கஷ்டப்படும் அவளைத் திரும்பிப் பார்ப்பார் யாரும் இல்லை. என் தகப்பானாரைப் பற்றியும் யாதொரு தகவலும் தெரியவில்லை.

சிறிது காலம் சென்றது. குளிர்காலம்; வங்காளத்திலிருந்து டில்லிக்குப் போகிற பட்டாணியர் ஒருவர் போகிற வழியில் காசிக்கு வந்து சேர்ந்தார். இரவு வெகுநேரம்கழித்து வந்ததால் நகரில் எங்கும் தங்குவதற்கு இடம் கிடைக்கவில்லை. அவருடன் அவருடைய மனைவியும் குழந்தையும் இருந்தார்கள் அவர்கள் எங்களுடைய குடிசைக்கு வந்து, இரவில் தங்குவதற்கு இடம் தரவேண்டுமென்று கேட்டார்கள். வெகு நாழிகையாகிவிட்டபடியால் வேறு எங்கும் இடம் கிடைக்கவில்லை. இந்தச் சிறு பையனை எடுத்துக் கொண்டு இந்த வேளையில் எங்கே போவது? குளிர் தாங்க முடியவில்லை. நாங்கள் கொஞ்சம் பேர்தான். குடிசையில் எங்களுக்குத் தங்க இடம் தரவேண்டும். உங்களுக்கு நான் வேண்டியது கொடுக்கிறேன் என்றார் பட்டாணியர். பட்டாணியர் ஏதோவொரு அவசரகாரியமாக டில்லிக்குப் போய்க் கொண்டிருந்தார். அவர்களுடன்கூட ஒரே ஒரு வேலைக்காரன் மட்டுந்தான் இருந்தான். என் தாய் ஏழை; ஆனால் மனத்தில் ஏழையல்ல. அவர்கள் இரவைக் கழிப்பதற்குக் குடிசையில் இடம் கொடுத்தாள். பட்டாணியர் மனைவியுடனும் மகனுடனும் குடிசையில் ஒரு பாகத்தில், விளக்கு வைத்துக் கொண்டு படுத்துக் கொண்டார். நாங்கள் மற்றொரு பக்கம் படுத்துக் கொண்டிருந்தோம்.

அந்தச் சமயத்தில் காசியில், குழந்தைகள் காணாமறபோகும் பயம் மிகவும் ஜாஸ்தியாக இருந்தது. எனக்கு அப்பொழுது சிறு வயது ஆகையால் அப்பொழுது நடந்ததெல்லாம் எனக்கு நன்றாக ஞாபகத்திற்கு வரவில்லை. என் தாய் என்னிடம் சொன்னதைச் சொல்லுகிறேன்.

நள்ளிரவில் விளக்கு எரிந்துகொண்டே இருந்தபொழுது ஒரு திருடன் உள்ளே நுழைந்து பட்டாணியரின் குழந்தையை எடுத்துக் கொண்டு போக அருகில் வந்தான். அந்தச் சமயத்தில் எனக்குத் தூக்கம் கலைந்தது. திருடன் செய்யும் காரியத்தைப் பார்த்தேன். திருடன் குழந்தையை எடுத்துக் கொண்டுபோவதைக் கண்டதும் உரக்கக் கத்தினேன். நான் போட்ட கூச்சலில் எல்லோரும் விழித்துக் கொண்டார்கள். பட்டாணியர் பெண்ஜாதி, பக்கத்தில் படுக்கையில் தன் குழந்தை இல்லாதது கண்டு கூக்குரலிட்டாள். திருடன் குழந்தையுடன் படுக்கைக்குப் பின்னால் போய் ஒளிந்து கொண்டான். பட்டாணியர் அவனைத் தலைமயிரைப் பிடித்து வெளியே இழுத்துக் குழந்தையை மீட்டார். திருடன் காலில் விழுந்து கெஞ்சி மன்றாடினதால், காதை மட்டும் அறுத்துவிட்டு, அவனை வெளியே துரத்திவிட்டார்".

இதுவரை படித்துக் கொண்டு வந்த உஸ்மான் சட்டென்று நிறுத்தி ஏதோ யோசனை செய்யலானான். "உங்களுக்கு அப்பொழுது வேறு ஏதாவது பெயர் இருந்ததோ?" என்று கேட்டான்.

"இருந்தது. அது அன்னிய நாட்டுப் பெயர் என்று தகப்பனார் அதை மாற்றி வேறு பெயரிட்டார்".

"மாஹரு என்பதுதான் அந்தப் பெயரோ?" என்று கேட்டான் உஸ்மான்.

"உங்களுக்கு அதெப்படித் தெரியும்?" என்று விமலா ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"நான்தான் அந்தத் திருட்டுப்போன குழந்தை" என்றான் உஸ்மான்கான்.

விமலா ஆச்சரியமடைந்தாள். உஸ்மான் மேலும் கடிதத்தைப் படிக்கலானான்.

"மறுநாள் காலை பட்டாணியர் புறப்படும்பொழுது என் தாயாரைப் பார்த்து, உங்களுடைய குழந்தை எங்களுக்குச் செய்த உபகாரத்திற்கு நாங்கள் இப்பொழுது ஏதாவது சரியான பதில் உபகாரம் செய்யவேண்டும்; ஆனால் அது இந்த நிலைமையில் சாத்தியமில்லை. எனினும் உங்களுக்கு ஏதாவது தேவையிருந்தால் சொல்லுங்கள். நான் டில்லிக்குச் சென்று அங்கிருந்து உங்களுக்கு வேண்டியதையெல்லாம் கொடுத்தனுப்புகிறேன். பணம் வேண்டுமானாலும் கொடுத்தனுப்புகிறேன்" என்றார்.

"எனக்குப் பணம் ஒன்றுக்கும் பிரயோஜனமில்லை. கூலிவேலை செய்து சம்பாதிப்பது எனக்குப் போதும். ஆனால் உங்களுக்குப் பாதுஷாவிடம் ஏதாவது செல்வாக்கு இருக்கிறதா?" என்று கேட்டாள் என் தாய்.

"இருக்கிறது. பாதுஷாவைக் கொண்டு உங்களுக்கு நான் உபகாரம் செய்யக்கூடும்".

"அப்படியானால் என் பெண்ணின் தகப்பனாரை அங்கே தேடிக் கண்டுபிடித்து, எனக்குத் தகவல் சொல்லியனுப்ப வேண்டும் என்றாள்" என் தாய்.

பட்டாணியர் அப்படியே செய்வதாக வாக்களித்துவிட்டுச் சென்றார். என் தாயினிடம் தங்க நாணயம் கொடுத்தார். அவள் அதைப் பெற்றுக் கொள்ள மறுத்துவிட்டாள். பட்டாணியர் சொன்ன சொல் தவறாமல் ராஜசேவகர்களைக் கொண்டு என் தகப்பனாரைத் தேடச் செய்தார்; ஆனால் எங்கும் கண்டுபிடிக்க முடியவில்லை.

பதினான்கு வருஷங்கள் கழித்து ராஜசேவகர்கள் என் தகப்பனாரைக் கண்டுபிடித்து ராஜாவின் கட்டளைப்படி என் தாயாருக்குத் தகவல் சொல்லி அனுப்பினார்கள். என் தகப்பனார் டில்லியில் இருந்தார். சசிசேகர பட்டாச்சாரியார் என்ற பெயரை விட்டுவிட்டு அபிராமஸ்வாமி என்று பெயர் வைத்துக் கொண்டிருந்தார்.

இந்தச் சமாசாரம் எங்களுக்கு வந்து சேர்ந்தபொழுது, என் தாய் இறந்துவிட்டாள். மந்திரத்தின் உதவியின்றிக் கலியாணம் செய்து கொண்டவர்களுக்குச் சுவர்க்கம் உண்டு என்றால், என் தாயும் அதை அடைந்திருப்பாள் என்பதில் சந்தேகமில்லை.

என் தகப்பனாரைப் பற்றித் தகவல் கிடைத்த நிமிஷம் முதல், எனக்குக் காசியில் இருப்புக் கொள்ளவில்லை. உலகத்தில் எனக்கு இருந்தவர் தகப்பனார் ஒருவரே. அவர் டில்லியில் இருந்ததால், நான் எப்படிக் காசியில் இருப்பது? இப்படியாக யோசித்து, நான் தனியாகக் காசியைவிட்டுக் கிளம்பினேன். டில்லிக்குச் சென்று என் தகப்பனாரைக் கண்டுபிடித்தேன். முதலில் என் தகப்பனார் என்னைக் கண்டு கோபமடைந்தார். ஆனால் மிகவும் அழுது, வீட்டு வேலை செய்து கொண்டிருக்க அவரிடம் அனுமதி பெற்றேன். மாஹரு என்றிருந்த என் பெயரை மாற்றி விமலா என்று வைத்தார். தகப்பனார் வீட்டில் இருந்து கொண்டு, நான் அவர் சேவையில் பரிபூரணமாக ஈடுபட்டேன். அவருக்கு வாழ்க்கையில் திருப்தி ஏற்படும்படியாக நடந்து கொண்டேன். அவருக்கு சுச்ருஷை செய்வதிலேயே எனக்கு ஓர் ஆனந்தம் ஏற்பட்டது. அவரைத் தவிர எனக்கு வேறு யாரும் இல்லை. ஆகையால் அவருடைய சேவையைத் தவிர வேறொரு சுகமும் உலகத்தில் இல்லையென்று தீர்மானித்தேன் என் பக்தியைக் கண்டோ, அல்லது மனித குணத்திற்கு இயற்கையான குழந்தையென்ற வாத்ஸல்யத்தாலோ, அவர் என்னிடம் அன்பு கொண்டார். சிநேகம் சமுத்திரத்தைச் சேரும் நதிபோன்றது. வெள்ளம் பெருகி விட்டால் மேன்மேலும் முன்னேறிப் போகும்.

எனக்கு நல்ல காலம் பிறந்தது. என் தகப்பனார் என்னிடம் பரிபூர்ணமாக அன்பு கொண்டார்.

## ஏழாம் அத்தியாயம்

## விமலாவும் திலோத்தமையும்

மாந்தாரணக் கிராமத்தில் ஓர் ஏழைப் பெண் வயிற்றில், என் தகப்பனாருக்கு மற்றொரு பெண் பிறந்தாள் என்று முன்பே சொன்னேன். என் தாயின் தலைவிதி எப்படியோ, அதே மாதிரிதான் அவளுடைய தாயின் தலைவிதியும் இருந்தது. குழந்தை பிறந்த கொஞ்ச காலத்திற்கெல்லாம் அவள் விதவையானாள். என் தாயைப் போலவே அவளும் கூலி வேலை செய்து பிழைத்து வந்தாள். ஈசுவர சிருஷ்டியின் விபரீதமான விதியென்னவென்றால், பர்வதத்தின் பாறையில் மிருதுவமான கொடி முளைத்து ஓங்குகிறது; கடலின் காரிருளில் ரத்தினங்கள் உண்டாகின்றன. தரித்திரங்கள் வீட்டில் கட்டழகிகள் பிறக்கிறார்கள். அந்த விதவையின் பெண் மாந்தாரணக் கிராமத்திலேயே அழகிற் சிறந்தவள் என்று பெயர் பெற்று விட்டாள். காலம் எல்லாவற்றையும் சரிப்படுத்திவிட்டது. விதவையினுடைய குற்றத்தைகூட ஜனங்கள் மறந்துவிட்டார்கள். அவளுடைய பெண் வெகு அழகாக இருந்தாள் என்பதுதான் எல்லோருடைய நினைவிலும் இருந்தது. அவளுடைய பிறப்பு வரலாறு அநேகருக்குத் தெரியவே தெரியாது; கோட்டையில் அது யாருக்குமே தெரியாது. சொல்ல வேண்டுமா? அந்த விதவைதான் திலோத்தமையின் தாயார்.

திலோத்தமை கர்ப்பவாசம் செய்யும்பொழுதுதான் என்னுடைய வாழ்க்கையின் முக்கியமான சம்பவம் ஏற்பட்டது அதற்கு அந்த விவாகந்தான் காரணம். அந்தச் சமயத்தில் என் தகப்பனார், தம் மாப்பிள்ளை விரேந்திரசிங்கை வரவழைத்துத் தம் ஆசிரமத்தில் வைத்திருந்தார். என் தகப்பனாரின் சிஷ்யர் என்ற முறையில் எனக்கும் அவருக்கும் பரிசயம் ஏற்பட்டது. அவரிடம், என் கணவரிடம், இயற்கையான நட்பு ஏற்பட்டது.

எந்த நிமிஷத்தில் அவரைப் பார்த்தேனோ அந்த நிமிஷம் முதல் என் மனத்தைப் பறிகொடுத்தேன்.

அதையெல்லாம் நான் எப்படி உங்களிடம் இப்பொழுது சொல்ல முடியும்? வீரேந்திரருக்குக் கலியாணம் ஆகிவிட்டதென்ற விஷயம் ஒன்றும் உபயோகப்படவில்லை. என் தகப்பனாரும் விஷயத்தை அறிந்து கொண்டார். ஒருநாள் இதைப்பற்றி இருவரும் பேசிக் கொண்டிருந்தார்கள். நான் ஒளிந்து நின்று கேட்டேன்.

"நான் விமலாவை விட்டுவிட்டு எங்கும் இருக்க முடியாது. விமலா உன் தர்ம பத்தினியாகிவிட்டால் நான் உன்னுடனேயே இருந்து விடலாம். இல்லை, அப்படி உனக்கு அந்தமாதிரி அபிப்பிராயம் இல்லையென்றால்..." என்றார் தகப்பனார்.

அவர் பேசி முடிப்பதற்கு விடவில்லை என்னுடைய காலஞ்சென்ற கணவர். அவரைத் தடுத்து, "ஸ்வாமி! சூத்திரப் பெண்ணை நான் எப்படிக் கலியாணம் செய்து கொள்ள முடியும்?" என்றார்.

"கள்ளப் புருஷனுக்குப் பிறந்த கன்னிகையை மணந்தாயே அதெப்படி?" என்று என் தகப்பனார் குத்திக் காட்டினார்.

என் கணவர் முகம் கொஞ்சம் விழுந்தது. "நான் கலியாணம் செய்து கொண்ட பொழுது எனக்கு அந்த விஷயம் தெரியாது. தெரிந்து கொண்டே ஒரு சூத்திரப் பெண்ணை எப்படிக் கலியாணம் செய்து கொள்வது? மேலும் உம்முடைய மூத்த பெண் கள்ளப்புருஷன் பெண்ணேயொழிய சூத்திரப் பெண் அல்ல" என்றார்.

"நீ விவாகம் செய்துகொள்ளச் சம்மதிக்காவிட்டால் உத்தமந்தான். ஆனால் நீ வந்து போய்க் கொண்டிருப்பது விமலாவின் எண்ணத்திற்கு எதிர்மாறாக இருக்கும். நீயும் இந்த ஆசிரமத்தில் இருப்பது உசிதமில்லை. நான்தான் உன்னை உன் வீட்டில் வந்து சந்திக்க வேண்டும்" என்று என் தகப்பனார் சொல்லிவிட்டார்.

அதிலிருந்து அவர் சில தினங்கள் வருவது போவதை நிறுத்தி விட்டார். நான் சாதக பட்சியைப் போலப் பிரதி தினமும் அவருடைய வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். ஆனால் எனது ஆசை கொஞ்சநாள் நிறைவேறவில்லை. அவர் வராமலே இருந்து விடமாட்டார் என்பது மட்டும் எனக்குத் தெரியும். மறுபடியும், சிறிதுகாலம் கழித்து, முன்போல வந்து போய்க் கொண்டிருக்கத் தொடங்கினார். இதைக் கவனித்த என் தகப்பனார் என்னிடம் ஒரு நாள், "நான் எல்லாவற்றையும் துறந்து தேசாடனம் செய்யப் போகிறேன். ஆகையால் நான் உன்னுடன் இருக்க முடியாது. நீ யாருடன் எங்கே இருப்பாய்?" என்று கேட்டார்.

தகப்பனாரைவிட்டுப் பிரிய வேண்டுமென்று கேட்டவுடன் நான் பயந்து போய் அழ ஆரம்பித்தேன். "நான் உங்களுடனேயே வருகிறேன். இல்லாவிட்டால் காசியில் இருக்கிறேன்" என்றேன்.

"விமலா, அது விஷயமாக நான் ஒரு நல்ல யோசனை செய்திருக்கிறேன். நான் இல்லாதபொழுது நீ ஜாக்கிரதையாக இருக்க ஏற்பாடு செய்கிறேன். மகாராஜா மான்சிங் புதிதாக மணந்துகொண்ட மகிஷிக்கு வேலைக்காரியாக இருக்க உன்னை நியமிக்கச் செய்கிறேன்".

"நீங்கள் என்னைத் தனியாக விட்டுவிடக் கூடாது" என்று நான் கதறினேன்.

"இல்லை, நான் இப்பொழுது எங்கேயும் போகவில்லை. நீ இப்பொழுது மான்சிங் வீட்டில் இரு. நான் இங்கேயே இருக்கிறேன். தினமும் உன்னை வந்து பார்த்துக் கொள்கிறேன். நீ அங்கே எப்படி இருக்கிறாய் என்பதைக் கவனித்து மேலே நடக்க வேண்டியதைப் பற்றி யோசிக்கிறேன்" என்றார் என் தகப்பனார்.

யுவராஜ்! நான் உங்கள் வீட்டில் வேலைக்காரியாக இருந்தேன். சாதுரியமாக, என் தகப்பனார் என்னைத் தம் மாப்பிள்ளையின் கண்ணில் படாமல் செய்து விட்டார்.

நான் உங்கள் வீட்டில் வெகுகாலம் இருந்தேன். ஆனால் உங்களுக்கு என்னைத் தெரியாது. உங்களுக்கு அப்பொழுது பத்து வயதுதான். நான் உங்களுடைய சிறிய தாய் அருகில் இருப்பதற்காக அமர்த்தப்பட்டேன். பூமாலையைப் போல மகாராஜா மான்சிங்கின் கழுத்தில் கணக்கற்ற பெண்மணிகள் கோக்கப்பட்டிருந்தார்கள். ஜோத்பூர் ராஜகுமாரியான ஊர்மிளா தேவியை உங்களுக்கு ஞாபகப்படுத்திக் கொள்ள முடிகிறதா? உங்கள் மாற்றாந்தாய்மார் எல்லோரும் உங்களுக்கு நினைவிலிருக்கிறார்களா? என்னை வேலைக்காரியென்று யாரும் அங்கே எண்ணவில்லை. ஊர்மிளா தேவி என்னைக்கூடப் பிறந்த சகோதரியைப் போல பாவித்து வந்தாள். அவள் எனக்குப் பல வித்தைகள் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்தாள். அவளால்தான் நான் சிற்பம் முதலிய கற்றுக் கொண்டேன். அவளுக்கு மனோரஞ்சகமாகக் காலம் போக்குவதற்கே நாட்டியமும் பாட்டும் கற்றுக்கொண்டேன். அவளே எனக்கு எழுதப்படிக்கக் கற்றுக்கொடுத்தாள். இப்பொழுது உங்களுக்கு இந்தக் கடிதம் எழுதியிருப்பது ஊர்மிளாதேவியின் புண்ணியத்தால்தான்.

அவளுடைய கிருபையில் வேறொரு பெரிய உபகாரமும் ஏற்பட்டது. தான் என்னைப்பற்றி எவ்வளவு அன்புடன் எண்ணினாளோ, அதே தினுசில் ராஜாவிடமும் என்னைப் பற்றி சொல்லிப் பரிசயம் செய்து வைத்தாள். என்னுடைய சங்கீதம் முதலியவைகளால் அதற்குக் கொஞ்சம் இடமேற்பட்டது அவைகளைக் கண்டு கேட்டதில், ராஜாவிற்கு என்மேல் பிரிதி உண்டாயிற்று. இதே காரணத்தால்தான் இருக்க வேண்டும், மகாராஜா மான்சிங் என்னைத் தம் சொந்த பரிவாரங்களில் ஒருத்திபோலக் கருதினார். அவருக்கு என் பிதாவிடத்தில் பக்தி. ஆகையால் பிதா என்னை எப்பொழுதும் சந்தித்துக் கொண்டே இருந்தார்.

ஊர்மிளா தேவியிடத்தில் எனக்கு எல்லா விஷயங்களிலும் பரமசௌகரியமாக இருந்தது. ஒரே ஒரு விஷயம் மட்டும் கொஞ்சம் விசனப்படத்தக்கதாக இருந்தது. என்னைவிட்டுப் பிரிந்து சென்றவர் தான். பிறகு அவர் என் கண்ணில் படவில்லை. அவர் என்ன என்னை மறந்துவிட்டாரா என்று யோசித்தேன்; மறந்திருக்க மாட்டார் என்று சமாதானம் செய்து கொண்டேன். யுவராஜ்! உங்களுக்கு ஆஸ்மானி என்ற வேலைக்காரியைப் பற்றி ஞாபகமிருக்கிறதா? இருக்கலாம் என்று நினைக்கிறேன். எனக்கும் அவளுக்கும் மிகவும் நெருக்கமான சிநேகம். அவள் மூலமாக நான் என் நாதருக்குத் தகவல் சொல்லியனுப்பினேன். அவரும் அவளைக் கண்டு பேசி அவள் மூலமாகச் சங்கதி சொல்லியனுப்பினார். பதிலாக அவர் எனக்குச் சொல்லியனுப்பியதையெல்லாம் நான் எப்படி எழுதுவேன்? நான் அவருக்கு ஒரு கடிதம் எழுதி ஆஸ்மானியின் கையில் கொடுத்தனுப்பினேன். அதற்கும் அவர் பதில் எழுதி அனுப்பினார். இந்த மாதிரி அடிக்கடி கடிதப்போக்குவரத்து நேர்ந்தது. ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளாமலே இந்த ரீதியில் பேச்சுவார்த்தைகள் நடந்தன.

மூன்று வருஷங்கள் கடந்தன. எப்பொழுது, மூன்று வருஷம் காணாமலிருந்தும், எங்கள் அன்பு தளரவில்லையோ, அப்பொழுது அது, சைவால புஷ்பம்போல் மேல்பகட்டுக் கொண்டதல்ல; தாமரையைப்போல ஆழ வேரூன்றியது என்று கண்டோம். என்ன காரணமோ, அந்தச் சமயம் அவருடைய திடமும் தளர்ந்தது. ஒரு நாள் ஒரு விபரீதம் நடந்தது. நான் இரவில் என் படுக்கையறையில் தனியாகப் படுத்துக் கொண்டிருந்தேன். திடீரென்று விழித்துக்கொண்டு பார்த்தபொழுது, ஒரு மனிதனை என் அருகில் கண்டேன்.

இனிமையான குரலில், "பிராணேசுவரி, பயப்படாதே, நான்தான் உன் அடிமை" என்ற வார்த்தைகள் என் காதில் விழுந்தன.

நான் என்ன பதில் சொல்லுவேன்? மூன்று வருஷங்களுக்குப் பின்னர் நேர்ந்த சந்திப்பு எல்லாவற்றையும் மறந்தேன். அவருடைய கழுத்தைக் கட்டிக் கொண்டு அழ ஆரம்பித்தேன். இதோ சாகப்போகிறேன், ஆகையால் இப்பொழுது எனக்கு வெட்கமில்லை, சொல்லுகிறேன். எல்லாவற்றையும் சொல்லிவிடுகிறேன்.

எனக்குப் பேச முடிந்தவுடன் "நீங்கள் எப்படி இங்கே வந்தீர்கள்?" என்று கேட்டேன். "ஆஸ்மானியைக் கேள். அவளுடைய ஏற்பாட்டின் மேல்தான் காவலையெல்லாம் சரிப்படுத்திக்கொண்டு இங்கே வந்தேன்; இதுவரை ஒளிந்து கொண்டிருந்தேன்".

"எங்கே?" என்றேன்.

"எங்கேயா? நீதான் சொல்லேன்" என்றார்.

நான் யோசனை செய்ய ஆரம்பித்தேன். நான் என்ன செய்தேன் என்று எனக்கு விளங்கவில்லை. இந்த மாதிரி நான் யோசித்துக் கொண்டிருக்கும்பொழுது, திடீரென்று கதவு திறக்கப்பட்டது. எதிரே மகாராஜா மான்சிங் நின்றார்.

விஸ்தரிப்பானேன்? வீரேந்திரசிங் சிறையில் அடைக்கப்பட்டார். அவருக்கு ராஜதண்டனை விதிக்கப்போவதாக ராஜா தெரிவித்தார். என் மனத்தில் வருத்தம் ஏற்பட்டதை அவர் அறிந்து கொண்டார். நான் கதறிக்கொண்டு போய் ஊர்மிளா தேவியின் காலில் விழுந்தேன். நான் செய்த குற்றத்தை வெளியிட்டுச் சொன்னேன். பிசகு முற்றும் என்னுடையதென்று நான் ஏற்றுக்கொண்டேன். என் பிதாவைக் கண்டதும் அவர் காலடியிலும் விழுந்து கதறினேன். மகாராஜா அவரிடம் பக்தி செலுத்துபவர்; அவரைக் குருவாக மதித்திருந்தார். நிச்சயமாக அவர் தடுத்தால் காப்பாற்றி விடலாம்! உங்கள் மூத்த பெண்ணை நினைப்பில் வைத்துக் கொள்ளுங்கள் என்றேன். என் பிதா மகாராஜாவுடன் சேர்ந்து செய்த யுக்தியே அது என்று கண்டேன். அவர் என் கதறலைக் காதில் கூடப் போட்டுக் கொள்ளவில்லை; கோபம் கொண்டு, "பாவி! நீ ஒரே அடியாய் வெட்கம் மானம் எல்லாவற்றையும் விட்டுவிட்டாயே!" என்றார்.

எங்களைக் காப்பாற்றுவதற்காக ஊர்மிளா தேவி மகாராஜாவிடம் எவ்வளவோ பரிந்து பேசிப் பார்த்தாள். "அவன் விமலாவைக் கலியாணம் செய்து கொள்வதானால் அந்தத் திருடனை விடுதலை செய்கிறேன்" என்றார்.

மகாராஜாவின் தீர்மானத்தைக் கண்டு நான் சும்மா இருந்துவிட்டேன். ஆனால் என் நாதர் ராஜாவிடம் வார்த்தைகளைக் கேட்டுக் கோபங்கொண்டு "நான் ஜீவிய முழுதும் சிறையிலிருப்பேன், அதற்குமேல் உயிர்த்தண்டனை வேண்டுமானாலும் கொடுங்கள். நான் கலியாணம் மட்டும் செய்து கொள்ள மாட்டேன். நீங்கள் ஹிந்துவாக இருந்துங்கூட என்னை இந்தமாதிரி கட்டாயப்படுத்துகிறீர்களே!" என்றார்.

"என் சகோதரி யுவராஜா ஸலீமின் மனைவியாக இருக்கும் பொழுது நீ சூத்திரப்பெண்ணை மணப்பதில் என்ன விசித்திரம்?" என்றார் மகாராஜா.

அப்படிச் சொல்லியும் அவர் சம்மதப்படவில்லை. ஆனால், "எப்படி ஆகவேண்டுமோ அப்படி ஆகட்டும். என்னை விடுதலை செய்தால், நான் விமலாவைப்பற்றி இனிமேல் எங்கும் பிரஸ்தாபிப்பதில்லை" என்றார்.

"நீ இப்பொழுது செய்திருக்கும் குற்றத்திற்கு என்ன பிராயச்சித்தம்? நீ அவளைக் கைவிட்டுவிட்டால் பிறர் அவளைக் கெட்டுப் போனவள் என்று சீந்தமாட்டார்களே!" என்றார் மகாராஜா.

அப்பொழுது அவர் கொஞ்சத்தில் விவாகம் செய்து கொள்ள சம்மதிக்கவில்லை. கடைசியாகச் சிறைவாசம் தாங்க முடியாது என்ற பயத்தில் அரைமனதுடன், "விமலா என் வீட்டில் வேலைக்காரி போல இருக்கவேண்டும். விவாகம் ஆகியிருக்கிறதென்பதை நான் உயிருடன் இருக்கும்பொழுது யாரிடமும் சொல்லக்கூடாது. என்னுடைய தர்மபத்தினியென்று அவள் யாரிடமும் சொல்லிக் கொள்ளக் கூடாது. அப்படியானால் அவளைக் கலியாணம் செய்து கொள்ளுகிறேன்; இல்லாவிட்டால் முடியாது" என்றார்.

நான் மனப்பூர்வமான புல்லரிப்புடன் அவரை ஏற்றுக் கொண்டேன். எனக்குப் பணம் கௌரவம் முதலியவைகளில் ஆசை கிடையாது. பிதாவும் மகாராஜாவும் சம்மதித்தார்கள். நான் வேலைக்காரி வேஷத்துடன் ராஜபவனத்தை விட்டுப் புறப்பட்டு, என் பதியின் கிருகத்திற்கு வந்து சேர்ந்தேன்.

இஷ்டமில்லாமல், பிறர் பலவந்தத்தின்பேரில், அவர் என்னைக் கலியாணம் செய்துகொண்டார். இந்த மாதிரி நிலைமையில் கலியாணமாவதை எந்தப் பெண் விரும்புவாள்? கலியாணமானதும், என் கணவருக்கு என்னைக் கண்டால் விஷமாய்ப் போய்விட்டது. முன்னிருந்த அன்பெல்லாம் எங்கோ தூரப் போய்விட்டது. மான்சிங் செய்த அவமானத்தைச் சதா மனதில் வைத்துக்கொண்டு, அதன் காரணமாக, என்னை வெறுத்தார். அதிலும் நான் ஓர் ஆறுதல் அடைந்தேன். இந்தமாதிரி கொஞ்சகாலம் கழிந்தது. ஆனால் அதெல்லாம் இப்பொழுது எதற்கு? நான் யாரென்று உங்களுக்குத் தெரிவதற்கு என் கதை முழுவதும் தேவையில்லை. காலம் வந்தது. நான் மறுபடியும் என் கணவரின் அன்பைப்பெற்றேன். ஆனால் அம்பர வம்சத்து ராஜா மான் சிங்கிடம் மட்டும் வீரேந்திரருக்கு மனஸ்தாபம் குறையவில்லை. தலைவிதி அப்படி இருக்கிறது. இல்லாவிட்டால், எல்லாம் இப்படி முடிவானேன்?

நான் சொன்னதில் இன்னும் ஒரு விஷயம்; இதைச் சொல்லியதில் என் வாக்குறுதியைக் காப்பாற்ற வேண்டுமென்பது மட்டும் என் நோக்கமல்ல. நான் குலஸ்திரீ தர்மத்தைக் கைவிட்டுவிட்டு, மாந்தாரணக் கோட்டை அரசனிடம் இருந்ததாகப் பலர் நினைத்திருக்கிறார்கள். நான் இறந்த பிறகு நீங்கள் என் பெயருக்கு இருக்கும் அந்த இழுக்கை மாற்றவேண்டும். அதற்காகவும் உங்களுக்கு எழுதுகிறேன்.

இந்தக் கடிதத்தில் என்னைப்பற்றி மட்டுந்தான் விவரித்திருக்கிறேன். யாரைப்பற்றி விவரங்கள் அறிய உங்கள் மனம் துடித்துக் கொண்டிருக்கிறதோ அவள் பெயரைக்கூட எழுதவில்லை. அந்தப் பெயர் இந்தப் பூமியிலிருந்தே அழிந்து விட்டதாக எண்ணுங்கள். திலோத்தமையென்று ஒருத்தி இருந்தாள் என்பதையே மறந்துவிடுங்கள்."

உஸ்மான் கடிதத்தை வாசித்து முடித்துவிட்டு, "அம்மா, நீங்கள் என் உயிரைக் காப்பாற்றியிருக்கிறீர்கள். நான் உங்களுக்குப் பதில் உபகாரம் செய்யத்தான் வேண்டும்" என்றான்.

விமலா நீண்ட பெருமூச்சுடன், "பூமியில் இனிமேல் எனக்கென்ன தேவை? நீ எனக்கு என்ன உபகாரம் செய்யப் போகிறாய்? ஆனாலும் ஒன்று..." என்றாள்.

"நான் அதைச் செய்கிறேன்" என்றான் உஸ்மான்.

விமலாவின் கண்களில் ஒளி பிறந்தது. "ஸ்மான்! என்ன சொல்லுகிறாய்? இந்தப் பாழாய்போன ஹிருதயத்திற்கு இன்னும் ஏமாற வழியிருக்கிறதா?"

உஸ்மான் தன் கையிலிருந்து ஒரு மோதிரத்தைக் கழற்றியெடுத்துக் கொடுத்து, "இந்த மோதிரத்தை வைத்துக் கொள்ளுங்கள். இரண்டொரு நாளில் ஒன்றும் ஆகிவிடாது. கத்லுகானின் பிறந்த நாள் வருகிறது. அன்றைக் கொண்டாட்டம் பெரிய உத்ஸவம்போல இருக்கும். காவலாளிகள் எல்லோரும் சந்தோஷத்தில் மயங்கியிருப்பார்கள். அன்று நான் உங்களை வெளியேற்றி விடுகிறேன். அன்றிரவு நீங்கள் அந்தப்புர வாசலில் வந்து இருங்கள். அப்பொழுது யார் உங்களிடம் இதேமாதிரியான மற்றொரு மோதிரத்தைக் காண்பிக்கிறானோ அவனைப் பின்பற்றி வெளியே போய்விடுங்கள். ஒன்றும் சிரமமின்றி வெளியேறி விடலாமென்று நம்புகிறேன். ஆனால் கடவுளின் கிருபை!" என்றான்.

"கடவுள் உனக்குத் தீர்க்காயுளைக் கொடுக்கட்டும். நான் வேறு என்ன சொல்லப்போகிறேன்?" என்றாள் விமலா.

விமலாவிற்கு நெஞ்சடைத்துக் கொண்டது. மேலே அவளால் பேச முடியவில்லை. உஸ்மானை ஆசீர்வாதம் செய்துவிட்டு விமலா விடைபெற்றுக் கொள்ளும்பொழுது. "இந்தக் காரியத்தை மிகவும் ஜாக்கிரதையாகச் செய்யுங்கள். தனியாகச் செல்லவேண்டும். கூட மற்றொருவர் இருந்துவிட்டால் பிரமாதம் விளைந்துவிடும்" என்றான்.

தான் திலோத்தமையைக்கூட அழைத்துச் செல்வதை உஸ்மான் தடுக்கிறான் என்று விமலா அறிந்தாள். "நல்லது, இருவர்தானே போகக்கூடாது? திலோத்தமை மட்டும் போகிறாள்!" என்று மனத்தில் நினைத்துக்கொண்டு விடை பெற்றுக் கொண்டாள்.

## எட்டாம் அத்தியாயம்

## ஆரோக்கியம்

தினங்கள் கழியும். நீ உன் இச்சைப்படி நடக்கலாம்; நாள் கழியும், நில்லாது. நினைத்த இடத்திலேயே இருந்தாலும், தினம் கழியும், நில்லாது. வழிப்போக்கனே! பெருத்தகாற்று மழையாக இருக்கிறது; தலைக்குமேல் மேகம் தடபுடலாக இடித்துக் கர்ஜிக்கிறது; மழையில் நனைந்து வெள்ளமாகிறாயா? மூடப்படாத உடம்பில் மழைத்தாரை தாக்குகிறது. ஒதுங்க இடம் அகப்படவில்லையா? ஒரு நிமிஷம் தைரியமாக இரு. இன்று கழிந்துவிடும், நில்லாது. கொஞ்ச நேரம் பொறு, கெட்ட காலம் போய், நல்லகாலம் பிறக்கும். யாருடைய துக்கந்தான், காலத்தில் கழியாமல் நீடிக்கிறது? பின் ஏன் அழுகிறாய்?

யாருடைய தினந்தான் கழியவில்லை? திலோத்தமை தூசியில் விழுந்து கிடந்தாள். அப்பொழுதும் நாட்கள் கழிந்தன.

விமலாவினுடைய ஹிருதயத்தில் பழி வாங்கும் பாம்பு இருந்து சதா துளைத்துக் கொண்டிருந்தது அதன் பிடுங்கலை அவளால் ஒரு நிமிஷமேனும் தாங்க முடியவில்லையென்றால், ஒரு நாளில் எவ்வளவு நிமிஷங்கள்? அப்படியிருந்தும் ஏன் நாள் கழியவில்லை?

கத்லுகான் சத்துருவை வென்று சிம்மாஸனத்தில் வீற்றிருந்தான். சுகமாக அவனுக்குக் காலம் கழிந்தது; நிற்கவில்லை.

ஜகத்சிங் நோயாளியாகப் படுத்திருந்தான். நோயாளிக்கு நாள் எவ்வளவு நீளம்? அது யாருக்குத் தெரியாது? அப்படியும் காலம் சென்றது.

நாட்கள் சென்றன. நாளுக்கு நாள் ஜகத்சிங்கின் உடம்பு குணமடைந்து வந்தது. ஒரு வழியாக யமன் வாயிலிருந்து தப்பி, ராஜகுமாரன் சௌக்கியமடைந்து வந்தான். முதலில் சரீரத்தின் தளர்ச்சி அகன்றது. பிறகு ஆகாரம் உள் சென்றது. பலம் வந்தது. பிறகு யோசனைதான்!

முதல் யோசனை: திலோத்தமை எங்கே? ராஜபுத்திரனுக்கு உடம்பு சௌகரியமானது முதல், இந்தக் கவலை அவனுக்கு நாளுக்கு நாள் அதிகமாயிற்று. அவளைப்பற்றி எல்லோரையும் கேட்க ஆரம்பித்தான். ஒருவரும் உற்சாகமாகப் பதில் சொல்லவில்லை. அயேஷா "தெரியாது" என்றாள்; உஸ்மான் சொல்லமாட்டான். வேலைக்காரர்களுக்கும் தெரியாது; தெரிந்தவர்களும் சொல்லத் தயாரில்லை. ராஜபுத்திரன் முள்ளின்மேல் படுத்துக் கொண்டிருப்பவனைப் போலத் தத்தளித்தான்.

இரண்டாம் யோசனை: எதிர்காலத்தில் தன்னுடைய கதி என்ன ஆகும், திடீரென்று இந்தக் கேள்விக்கு யார் பதில் சொல்லக்கூடும்? தான் ஒரு கைதி என்பதை ராஜபுத்திரன் அறிந்து கொண்டான். அயேஷா, உஸ்மான் இவ்விருவர்களுடைய கருணையில்தான் அவன் சிறைச்சாலைக்குப் பதிலாக ஓர் அழகிய அறையில் வாசம் செய்தான். எது வேண்டுமென்று எண்ணினானோ அதை அவன் வாய்திறந்து கேட்குமுன் பெற்றான். ஒரு சகோதரியைக் காட்டிலும் அதிகமான வாஞ்சையுடன் அயேஷா வேண்டியதைச் செய்தாள். அதே மாதிரியே வேலைக்காரர்களும் மிகவும் பவ்வியமாக நடந்து கொண்டார்கள். மதுரமான பானீயத்தை அருந்தி மகிழும் கூட்டில் அடைபட்ட பட்சிபோல, ராஜபுத்திரன் கட்டுப்பட்டுக் கிடந்தான். எப்பொழுது விடுதலை? விடுதலை யடைவதற்குத்தான் என்ன வழி? அவனுடைய சேனையெல்லாம் எங்கே? தலைவன் இல்லாமல் அவை என்னவாயிற்றோ?

மூன்றாம் யோசனை: அயேஷா, இந்தச் சாதுரியமான பெண் பிறருக்கு நல்லது செய்வதென்னும் குணமே உருவெடுத்து வந்தவள் எதற்காக இந்த மண்ணுலகில் வந்து அவதரித்தாள்?

அயேஷாவிற்கு ஓய்வில்லை, ஒழிவில்லை, சிரம பரிகாரம் செய்துகொள்ளவில்லை என்று ராஜகுமாரன் கண்டான். இரவும் பகலுமாக, நோயாளிக்குச் சுச்ருஷை செய்தாள். நோயாளிக்கு உடம்பு குணமடைந்தது முதல், ஒவ்வொரு நாளும் காலையில், அந்தக் காலைச் சூரிய ரூபிணி, கையில் ஒரு மாலையேந்திர, லாவண்ய ஸ்வரூபமான நடையுடன் அவனிடம் வந்தாள்.

யார் நோய் வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாக இருந்ததில்லை? அப்படிப்படுத்திருந்தவர்கள் யாருக்காவது மனமோகினியான ஒரு பெண் சுச்ருஷை செய்தால் நோயிலும் ஒரு சுகம் இருப்பதாகத் தோன்றும்

நீங்கள் ஜகத்சிங்கின் அவஸ்த்தையைக் காண வேண்டுமென்று விரும்புகிறீர்களா? அப்படியானால் அவனுடைய படுக்கையில் படுத்துக் கொண்டிருப்பதாக நினைத்துக் கொள்ளுங்கள். உடம்பில் வியாதியின் உபத்திரவத்தையும் கற்பித்துக் கொள்ளுங்கள். சத்துருக்களின் நடுவே கைதியாயிருப்பதையும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

அப்புறம், அலங்காரம் செய்ததும் வாசனை ஏற்பட்டதுமான அந்தப் படுக்கையறையில் இருப்பதாக எண்ணிக் கொண்டு விட்டீர்களா? படுக்கையில் படுத்த வண்ணம் நீங்கள் கதவுப் பக்கம் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். திடீரென்று உங்கள் முகம் மலருகிறது. அந்த விரோதி வீட்டில் உங்களுக்குச் சகோதர வாஞ்சையுடன் பணிசெய்யும் பெண்மணி வருகிறாள்! நன்றாக மலர்ந்த தாமரைபோன்ற பூர்ண யௌவனம் பொருந்தியவள். நீங்கள் படுத்தபடியே அவளையே பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். பாருங்கள் நன்றாக! என்ன சாயல்! கொஞ்சம் கொஞ்சந்தான் உயர்ந்தது. அதற்கேற்றபடி விசாலமும் புஷ்டியும் கொண்டது; இயற்கையாக அவளுக்கு அமைந்த ராணி போன்ற தோற்றம்! காலடியெடுத்து வைப்பது எவ்வளவு லலிதமாக இருக்கிறது? மதயானை நடை என்கிறார்கள். அன்ன நடை என்கிறார்கள். அது எது? இதைப் பாருங்கள்! ஸ்வரத்திற்கு லயம் பாட்டில் இருக்கிறது. இந்தக் காலடி கீதத்திற்கு லயம் உங்களுடைய ஹிருதயத்தில் இருக்கிறது. கையில் புஷ்பமாலை வைத்துக் கொண்டிருக்கிறார்கள்! ஆனால் கையின் சோபையில் புஷ்பமாலை மங்கிக்கிடக்கிறது பார்த்தீர்களா? அவள் அணிந்திருக்கும் சுவர்ணஹாரம் அவளுடைய கழுத்தின் ஜோதியில் பளபளப்புக் கொள்ளுகிறது அல்லவா? அவள் கழுத்தைத் திருப்புவது தான் எவ்வளவு அழகாக இருக்கிறது? அடர்ந்த கறுத்த கூந்தல், காதணிகள், பிறகு அழகிய தலை! என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்! அவள்தான் அயேஷா!

எதுவரை ராஜகுமாரனின் நோய்க்குச் சுச்ருஷை அவசியமாய் இருந்ததோ அதுவரை அயேஷா பிரதிதினமும் இம்மாதிரி செய்தாள். ராஜகுமாரனின் உடம்பு சௌகரியமாக ஆக அயேஷா தான் வந்து போவதைக் குறைக்கலானாள். அவன் பூர்ணமாகக் குணமடைந்த போது அயேஷா வருவதும் நின்றுவிட்டது. என்றாவது ஓரிருதடவை வருவாள்.

ஒரு நாள் பிற்பகலில் ஜகத்சிங் ஜன்னலில் நின்று கொண்டு, கோட்டைக்கு வெளியே பார்த்துக் கொண்டிருந்தான். எவ்வளவு பேர் தங்கள் இஷ்டம்போலப் போகவேண்டிய இடங்களுக்குப் போய்க் கொண்டிருந்தார்கள்! அவர்களுடன் தன் நிலையை ஒப்பிட்டுப் பார்த்து ஜகத்சிங் கலக்கமடைந்தான். அந்தச் சமயம் உஸ்மான் அங்கு வந்து சேர்ந்தான்.

ஒருவருக்கொருவர் முறைப்படி மரியாதை செய்து கொண்டார்கள்.

"ஜன்னலில் நின்றுகொண்டு என்ன பார்க்கிறீர்கள்?" என்று உஸ்மான் கேட்டான்.

"யாரோ ஒருவன் ஏதோ செய்துகொண்டிருக்கிறான். கூட்டமாக இருக்கிறது".

"அது யார், தெரியவில்லையா?"

"தெரியவில்லை".

"அவர் உங்கள் பிராம்மணர்களில் ஒருவர். அதிக தாராளமாகப் பேசுகிறார். அவரை நான் மாந்தாரணத்தில் முன்பே பார்த்து இருக்கிறேன்".

மாந்தாரணக் கோட்டையிலா? ஒருவேளை திலோத்தமையிடமிருந்து செய்தி கொண்டு வந்திருக்கிறாரோ? என்று ராஜகுமாரன் தனக்குள் யோசிக்கலானான்.

"அவர் பெயர் என்ன?" என்று கேட்டான்.

உஸ்மான் யோசனை செய்துகொண்டே, "அவர் பெயர் கொஞ்சம் கடினமானது. சட்டென்று ஞாபகத்திற்கு வரவில்லை. கணபதி இல்லை கணபதி கஜபதி இல்லை. கஜபத் என்றால் என்ன?"

"கஜபத்? கஜபத் என்று இங்கே பெயர் கிடையாதே!"

"கஜத்தின் பெயரையெல்லாம் ஓ! ஞாபகம் வந்துவிட்டது. அவர் பெயர் கஜபதி வித்தியா திக்கஜர்!"

"அவருடன் பேசினால் தேவலை" என்றான் ஜகத்சிங்.

உடனே உஸ்மான் அருகிலிருந்த ஓர் ஆளை கூப்பிட்டுத் திக்கஜரைக் கூட்டிக் கொண்டுவரச் சொன்னான்

## ஒன்பதாம் அத்தியாயம்

## திக்கஜரின் சரடு

வேலைக்காரனுடன் கஜபதி வித்தியாதிக்கஜர் (இவரைப் பற்றி வாசகருக்கு நினைவிருக்கலாமென்று எண்ணுகிறோம்) அறையில் நுழைந்தவுடனே, ஜகத்சிங் அவரைப் பார்த்து, "நீங்கள் பிராம்மணரா?" என்று கேட்டான்.

திக்கஜர் பதில் சொல்லாமல், "யாவத்மேரௌ ஸ்திதா: தேவா: யாவத் கங்காமஹீதலே: அஸாரே கலு ஸம்ஸாரே ஸாரம் ச்வசுரமந்திரம்" என்றார்.

ஜகத்சிங் சிரிப்பை அடக்கிக்கொண்டு அவருக்கு நமஸ்காரம் செய்தான்.

"கான்ஸாஹப் நன்றாக இருக்கவேண்டும்!" என்று கஜபதி ஆசீர்வாதம் செய்தார்.

"ஐயா, நான் மகம்மதியன் அல்ல; நான் ஹிந்துதான்" என்றான் ஜகத்சிங்.

திக்கஜர் தமக்குள், இந்த மிலேச்சன் கைகாரப் பயலாயிருக்கிறான்; என்னை ஏமாற்றப் பார்க்கிறான். இவனுக்குத் தகுந்தாற்போல பேசவேண்டும் என்று நினைத்துக்கொண்டு, "ஷேக் பாபு! நான் நீங்கள் சொல்லுகிறபடி கேட்கத் தயார்" என்றார்.

"ஸ்வாமி! நீங்கள் பிராம்மணர்; நான் ராஜபுத்திரன்; நீங்கள் இந்தமாதிரி பேசக்கூடாது. உங்கள் பெயர் கஜபதி வித்தியா திக்கஜர் தானே?"

"ஓகோ, இந்தக் கன்றுக்குட்டி என் பெயரைக்கூடத் தெரிந்து கொண்டிருக்கிறான்! என்ன ஆபத்தோ, தெரியவில்லையே!" என்று மனத்தில் எண்ணிக்கொண்டு சரியான பதில் சொல்லவில்லை.

பிராம்மணர் பயப்படுகிறார் என்று ஜகத்சிங் தெரிந்து கொண்டான். அவரிடமிருந்து உபயோகமானதாக ஒன்றும் அறியமுடியாதென்று கண்டு, வேறு ஏதாவது பேசலாமென்றெண்ணி, "உங்கள் கையில் இருப்பது என்ன?" என்று கேட்டான்.

"மாணிக்பீரின் கிரந்தம்!"

"என்ன! பிராம்மணர் கையில்!"

"நான் பிராம்மணனாக இருந்தேன். இப்பொழுது பிராம்மணன் அல்ல".

ராஜபுத்திரன் ஆச்சரியமடைந்தான்.

"ஏன்? நீங்கள் மாந்தாரணக் கோட்டையில் இருந்தீர்களோ, இலலையோ?" என்றான்.

'சரிதான்! இனிமேல் நாம் பிழைக்கப்போவதில்லை. நாம் வீரேந்திரசிங்கின் ஆள் என்று கண்டுகொண்டுவிட்டான். அவருக்கு நேர்ந்த கதிதான் நமக்கும்' என்று எண்ணினார் திக்கஜர். அவர் உடல் வெடவெடென்று நடுங்கிற்று.

"ஏன், என்ன சமாச்சாரம்?" என்று ராஜகுமாரன் கேட்டான்.

திக்கஜர் கையைப் பிசைந்துகொண்டு, "பாபா, நான் உங்கள் அடிமை! என்னைக் காப்பாற்றுங்கள் ஸாஹப்!" என்று கதறினார்.

"ஓய், நீர் ஒன்றும் பயப்படவேண்டாம். எங்கே, அந்தப் புத்தகத்திலிருந்து ஏதாவது கொஞ்சம் படியும். பார்ப்போம்!" என்றான் ராஜகுமாரன் அவரைத் தைரியப்படுத்தலாம் என்று எண்ணி.

திக்கஜர்: அந்தப் புத்தகத்திலிருந்து ஏதோ கொஞ்சம் படித்தார்.

"ஆமாம், நீங்கள் பிராம்மணராயிருந்து கொண்டு இதை ஏன் படிக்கிறீர்கள்?" என்று ராஜகுமாரன் மறுபடியும் கேட்டான்.

"நான் மகம்மதியன் ஆகிவிட்டேன்".

"எதற்காக?"

"மகம்மதியர்கள் கோட்டைக்குள் நுழைந்ததும் என்னைப் பார்த்து, 'பாம்மன்! உன் ஜாதியைத் தொலைக்கிறோம்' என்றார்கள். நான் மகம்மதின் ஆகிவிட்டேன்".

"பாக்கி எல்லோரும் என்ன ஆனார்கள்?" என்று திடீரென்று ராஜபுத்திரன் கேட்டான்.

"இன்னும் அநேக பிராம்மணர்கள் இந்தமாதிரி முஸல்மான்கள் ஆகிவிட்டார்கள்".

"வித்தியா திக்கஜ ஸ்வாமிகளே!"

"சரி, ஸாஹப், கோட்டையில் வேறு யாரைப் பற்றியாவது உமக்குத் தெரியுமா?"

ராஜபுத்திரனின் அபிப்பிராயத்தை அருகில் இருந்த உஸ்மான் அறிந்து மனவருத்தமடைந்தான்.

"அபிராமஸ்வாமி எங்கேயோ ஓடிப்போய்விட்டார்" என்றார் திக்கஜர்.

குறிப்பிட்டுக் கேட்காவிட்டால் அவரிடமிருந்து ஒன்றும் அறியமுடியாது என்று எண்ணி ராஜகுமாரன் உடனே, "வீரேந்திரசிங் என்ன ஆனார்?" என்று கேட்டான்.

"நவாப் கத்லுகான் அவருடைய தலையைச் சீவி விட்டார்".

ராஜபுத்திரன் முகம் சிவந்தது. உஸ்மானைப் பார்த்து, "அப்படியா? இந்தப் பிராம்மணன் பொய் சொல்லுகிறானா"? என்று கேட்டான்.

உஸ்மான் கம்பீரமாக, "நவாப் விசாரணை செய்து, ராஜத் துரோகம் செய்த குற்றத்திற்காக, வீரேந்திரசிங்கைத் தண்டித்து விட்டது உண்மைதான்!" என்றான்.

ராஜபுத்திரனின் கண்களிலிருந்து நெருப்புப் பொறி பறந்தது. "தயவுசெய்து இன்னொரு கேள்விக்கும் பதில் சொல்லுங்கள். அது உங்களுக்குச் சரியென்று தோன்றுகிறதா?" என்று அவன் உஸ்மானைக் கேட்டான்.

"நான் அபிப்பிராயம் வெளியிடுவது தகாது".

ராஜகுமாரன் வெகுநேரம் அசைவற்றுப் போனான். அதுதான் சரியான சமயம் என்று எண்ணி, உஸ்மான் திக்கஜரைப் பார்த்து, "நீர் போகலாம்" என்றான்.

திக்கஜர் பிழைத்தோம் என்று எண்ணிக்கொண்டு மெள்ள நழுவ ஆரம்பித்தார். ராஜகுமாரன் அவரைக் கையைப் பிடித்து நிறுத்தி "இன்னொரு கேள்விக்குப் பதில் சொல்லும்; விமலா எங்கே?" என்றான்.

பிராம்மணர் பெருமூச்சு விட்டுக்கொண்டு கொஞ்சம் அழுதார். "விமலா நவாபின் பீகம்களில் ஒருத்தியாகிவிட்டாள்."

ராஜகுமாரன் உஸ்மானின்மேல் ஒரு மின்னல் பார்வை பாய்ச்சி, "வாஸ்தவமா?" என்று கேட்டான்.

உஸ்மான் ஒன்றும் பதில் சொல்லாமல் திக்கஜரைப் பார்த்து, "நீர் இன்னும் என்ன செய்கிறீர்? போகலாம்" என்றான்.

ராஜபுத்திரன் அவருடைய கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, "இன்னும் ஒரு நிமிஷம்; இன்னும் ஒரே ஒரு கேள்வி என்றான்". அவனுடைய சிவந்த கண்கள் இன்னும் அதிகமாக ஜொலித்தன.

"இன்னும் ஒரு வார்த்தை! திலோத்தமை எங்கே?"

"திலோத்தமை நவாபின் மனைவிகளில் ஒருத்தியாகி விட்டாள்; வேலைக்காரிகள் சூழச் சௌக்கியமாக இருக்கிறாள்".

ராஜகுமாரன் பிராம்மணர் கையை விட்டுவிட்டுத் திடீரென்று தன் கையைத் தூர எடுத்தான்

உஸ்மான் சிறிது வெட்கம் கொண்டவனாய் மெள்ள, "நான் வெறும் சேனாதிபதிதான்" என்றான்.

ராஜபுரத்திரன், "நீங்கள் ஒரு பேயின் சேனாதிபதி!" என்றான்.

# பத்தாம் அத்தியாயம்

## பதுமை அழிதல்

அன்றிரவு ஜகத்சிங் தூங்கவில்லை. படுக்கையில் நெருப்புப் பரப்பியிருந்ததுபோலத் துடித்தான். அவன் மனத்திலும் நெருப்பு ஜவாலை. திலோத்தமை இல்லாவிட்டால் ஜகத்சிங்கிற்கு இந்த உலகமே சூன்யமாகத் தோன்றும் அப்படியிருக்க, ஏன் இன்னும் திலோத்தமை உயிர் விடவில்லை? சாகவில்லை? என்று அவன் நினைப்பதென்றால் அது என்ன பரிதாபமான விஷயம்?

அது எதனால்? திலோத்தமை ஏன் உயிர் விடவேண்டும்? அந்த மாதுரியம் ததும்பிய மேனியாளின் நினைவு வந்தபொழுதே அவள் உடம்பு சுடுகாட்டுச் சாம்பல் ஆகவேண்டுமென்று எண்ணினான். அது எதனால்? திலோத்தமையென்று ஒருத்தி இருந்தாள் என்ற அடையாளமே உலகத்தில் எங்கும் தென்படக் கூடாதா? ஏன்? காரணத்தை நினைக்கும்பொழுது ஜகத்சிங் தன்னையறியாமல் மளமளவென்று கண்ணீர் உதிர்த்தான்

அந்தப் பூப்போன்ற பொன்மேனி! மகா பாபியான கத்லுகானின் மடியில் அந்த ஸர்வாங்க ஸுந்தர வடிவம் இருப்பதாக நினைத்தபோதே ஜகத்சிங்கின் ஹிருதயத்தில் கொடும் தீக்கொழுந்து விட்டெரிந்தது

'என் உள்ளக்கோவிலில் அதிஷ்டமான தேவதையான திலோத்தமை! பட்டாணியனின் வீட்டிலா?... என் திலோத்தமை கத்லுகானின் பத்தினியா?'

ராஜபுத்திரன் மனம் தடுமாறியது.

அவளுடைய பதுமை அவனுடைய உள்ளத்தில் வேரூன்றி இருந்தது. அதைப் பிடுங்கினால் உள்ளமே சிதறிப்போகும். எப்படி அந்த மனமோகன ரூபத்தை மறப்பது? அவனுடைய தேகத்தில் எலும்பும் சதையும் ரத்தமும் இருக்கும் வரையில் அவள் அவனுடைய மனத்தில் குடிகொண்டிருப்பாளே!

ராஜபுத்திரன் மனம் நிலையற்றுப் போயிற்று. யோசனையே குழம்பிற்று. இரவு முழுவதும் தலையை இரண்டு கைகளாலும் பிடித்துக்கொண்டு கிடந்தான். தலை கிர்ரென்று சுற்றியது. என்ன செய்வதென்று யோசனையே ஓடவில்லை.

இப்படி வெகுநேரம் படுத்திருந்ததில் ஜகத்சிங் உடம்பில் வலியெடுத்தது தேகத்திலும் மனத்திலும் ஜ்வரதாபம் ஏற்பட்டது. எழுந்து ஜன்னலருகில் போய் நின்றான்.

குளிர்ச்சியான கோடைக்காற்று ஜகத்சிங்கின் முகத்தில் வந்து அடித்தது இரவு இருள் மண்டியிருந்தது. ஆகாயத்தில் சில மேகங்கள் படர்ந்திருந்தன. நக்ஷத்திரங்கள் எல்லாம் நன்றாகத் தென்படவில்லை. ஒவ்வொரு மேகத் துண்டின் இடைவெளியில் ஒவ்வொரு நக்ஷத்திரம் மங்கலாகத் தெரிந்தது. தூரத்து மரவரிசை, இருட்டோடு இருட்டாகக் கலந்து ஒன்றுபட்டு இருந்தது. அருகிலிருந்த மரங்களின்மேல் சில நக்ஷத்திரங்கள் வைரங்களைப்போல ஜொலித்தன. எதிரே இருந்த ஒரு குளத்தில் ஆகாயம் மரங்கள் எல்லாம் பிரதிபலித்து இருளில் மங்கலாகத் தென்பட்டன.

ஜகத்சிங்கின் தேக உஷ்ணத்தை அந்தக் குளிர்ந்த காற்றானது கொஞ்சம் போக்கிற்று அப்படியே நின்றான். நினைவு கொஞ்சம் மும்முரமாக வேலை செய்தது ஏதோ வொரு வெறுப்பு மனத்தில் பிரவேசிக்க ஆரம்பித்தது ஆசையை, காதலை, கைவிடுவதென்பது ஒரு துன்பந்தான்; ஆனால் ஒரே அடியாக வெறுப்பு மனத்தில் தோன்றிவிட்டால் அது அவ்வளவு சிரமம் கொடுக்காது. காரிருள் நிறைந்த ஆகாயத்தைப் பார்த்தான். அதே விதமாக இருள் நிறைந்த தன் ஹிருதயத்தையும் ஆராய்ந்து பார்த்தான் பாலிய யுவதசைகளின் நினைவுகள் வந்தன. அதில் மனம் லயித்து ஆறுதல் பெற்றது. அப்படியே ஜன்னலின் அருகே பூமியில் படுத்து மறுபடியும் தூங்கிப் போய்விட்டான். சிரமம் மேலிட்டு நினைவே மயக்கமாக மாறிற்று அரைத் தூக்கத்தில் கனவு கண்டான். தூங்கும் முகத்தில் புருவ நெரிப்பு தோன்றிற்று. துக்கத்தின் அடையாளம் தென்பட்டது. உதடுகள் துடித்தன. நெற்றியில் வியர்வை உண்டாயிற்று. கைவிரல்களை இறுக மூடிக் கொண்டன. திடீரென்று விழித்துக்கொண்டான்.

காலையில் உஸ்மான் வந்து அவனை எழுப்பினான். ராஜகுமாரன் கண்விழித்ததும், உஸ்மான் அவனுக்கு மரியாதையாக வணங்கிவிட்டு, அவன் கையில் ஒரு கடிதத்தைக் கொடுத்தான். ராஜபுத்திரன் கடிதத்தைக் கையில் வைத்துக் கொண்டு உஸ்மானின் முகத்தையே பார்த்தான். ராஜபுத்திரன் மனமுடைந்து போயிருந்தான் என்பது உஸ்மானுக்குத் தெரிந்தது. ஆகையால் அந்தச் சமயம் ஒன்றும் பேசுவதில் உபயோகமில்லையென்று எண்ணி "ராஜபுத்திர! நீங்கள் ஏன் நேற்றிரவு பூமியில் படுத்துக்கொண்டு தூங்கினீர்கள் என்று இப்பொழுது நான் கேட்கவில்லை. இந்தக் கடிதத்தை அனுப்பியவளிடம் நான் வாக்குறுதி கொடுத்தபடி அதை உங்களிடம் சேர்த்துவிட்டேன். எனக்கு எல்லாம் தெரியும். நான் போய்விட்டுச் சாயங்காலம் வருகிறேன். ஏதாவது பதில்

இருந்தால், அதைக் கொண்டுபோய் அவளிடம் கொடுக்கிறேன்" என்று சொல்லிவிட்டு உஸ்மான் வெளியே போய்விட்டான்.

ராஜபுத்திரன் விமலாவின் கடிதத்தைப் படித்தான். முதலிலிருந்து கடைசி வரை படித்ததும், நெருப்பை மூட்டிக் கடிதத்தை அதில் போட்டான். அது நன்றாக எரிந்ததும் அதை ஒருதரம் பார்த்தான். என் நினைவின் கடைசி அடையாளமும் இந்த நெருப்பில் எரிந்து போய்விட்டது. இனிமேல் பழைய நினைவே பாக்கியில்லை என்று சொல்லிக்கொண்டான்.

காலைக்கடன்களைச் செய்து முடித்துக்கொண்டு இஷ்ட தேவதையை வணங்கினான்.

கைகூப்பி வானை நோக்கிய வண்ணம், "பிரபோ! அடியேனைக் கைவிடக்கூடாது! நான் ராஜ தர்மத்தை அனுஷ்டிக்கிறேன்; க்ஷத்திரிய குலத்திற்கேற்ற செயல்களைச் செய்கிறேன். எனக்கு அருள் புரிய வேண்டும்! அதர்மம் செய்யும் பட்டாணியனின் மனைவியைப் பற்றிய நினைவு மனத்திலிருந்து அகற்றி விடுகிறேன் அவளால் கொஞ்சம் வீழ்ச்சி அடைந்தேன். அப்போது உன் பாதங்களை அடைந்து விட்டேன். மனிதனால் செய்யக்கூடியதை நான் செய்து முடிக்கிறேன். மனிதன் எதைச் செய்ய வேண்டுமோ அதைச் செய்கிறேன். இனிமேல் நான் திலோத்தமையின் காதலை வேண்டுபவன் அல்லன்! இனிமேல் அவளைப் பார்க்க இச்சைப்படுகிறவனுமல்லன்! சென்று போன நினைவுகளே ஹிருதயத்தைப் பொசுக்குகின்றன. ஆசைகளை அறவே வெறுத்துவிட்டேன். நினைவுகளே நின்று போராடுகின்றன. ஈசுவரா! அவைகள் என்னை விட்டு நீங்க "நீங்கள் அருள் புரியவேண்டும். அவைகளின் துளைப்புத் தாங்கவில்லை" என்று திடமாக வாய்விட்டுச் சொன்னான்.

ஜகத்சிங்கின் மனத்திலிருந்த பதுமை விலகிற்று.

திலோத்தமை அப்பொழுது புழுதியில் படுத்துப் புரண்டு கொண்டிருந்தாளா? என்ன கனவு கண்டு கொண்டிருந்தாள்? கன இருளில் ஒரு தாரகையைக் கண்டு தேறினாள்; அது எட்டாமல் போய்விட்டது.

## பதினோராம் அத்தியாயம்

## உள்ளே!

சொன்னபடி பிற்பகலில் உஸ்மான் ஜகத்சிங்கிடம் வந்தான்.

"யுவராஜ ஏதாவது பதில் எழுதி அனுப்பும் அபிப்பிராயம் உண்டா?" என்று கேட்டான்.

ராஜபுத்திரன் பதில் எழுதி வைத்திருந்தான். அதை எடுத்து உஸ்மானிடம் கொடுத்தான். உஸ்மான் அதைக் கையில் வாங்கிக் கொண்டு, "என்னைப் பற்றித் தப்பாக எண்ணக் கூடாது. உத்தரவு என்னவென்றால், கோட்டையிலுள்ளவர்கள் யார் கடிதம் அனுப்பினாலும் காவலாளிகள் அதைப் படிக்காமல் அனுப்பக் கூடாது".

ராஜபுத்திரன் கொஞ்சம் கோபமடைந்தான்.

"அது அனாவசியம். நீங்கள் கடிதத்தைப் பிரித்துப் படித்துப் பார்க்கலாம். இஷ்டமிருந்தால் அனுப்பலாம்".

உஸ்மான் கடிதத்தைப் பிரித்துப் படித்தான். அதில் இவ்வளவுதான் எழுதப்பட்டிருந்தது:

"அதிருஷ்டமற்றவளே! உன் வேண்டுகோளை நான் மறக்கவில்லை. ஆனால் நீ பதிவிரதையாக இருப்பது உண்மையானால், கூடிய சீக்கிரம் கணவன் போன வழியைப் பின்பற்றிச் சென்று உன் களங்கத்தை நீயே அழித்துவிடு!"

ஜகத்சிங்

உஸ்மான் கடிதத்தைப் படித்துவிட்டு, "ராஜபுத்திரா! உங்களுடைய ஹிருதயம் மிகவும் கடினமானது" என்றான்.

ராஜபுத்திரன் துடுக்காக, "பட்டாணியரைப் போல அன்று" என்றான்.

உஸ்மானின் முகம் கொஞ்கம் சிவந்தது. "உங்களிடம் பட்டாணியர் எல்லா விஷயங்களிலும் கெடுதலாக நடந்து கொள்ளவில்லை யென்று நினைக்கிறேன்" என்றான்.

ராஜபுத்திரனுக்குக் கோபம் வந்தது; வெட்கமும் உண்டாயிற்று.

"இல்லை ஐயா! என்னைப்பற்றி நான் இப்பொழுது பேசவில்லை. நீங்கள் என் விஷயத்தில் அதிக தயவாகத்தான் நடந்து கொண்டிருக்கிறீர்கள். கைதியாக வைத்திருந்தாலும் உயிர்ப் பிச்சை அளித்திருக்கிறீர்கள்; சேனையைக் கொன்று குவித்தவனை மன்னித்திருக்கிறீர்கள்; சிறைச்சாலையில் விலங்குடன் கிடக்க வேண்டியவன் சுகமான மாளிகையில் வாசம் செய்கிறேன். இதைக் காட்டிலும் வேறென்ன செய்யக்கூடும்? ஆனால் நான் சொல்லுவதென்னவென்றால், இவையெல்லாம் எதற்காக? எதில் போய் முடியப்போகிறது? நான் கைதியாயிருந்தால் சிறைச் சாலையில் அல்லவா இருக்கவேண்டும்? இந்தத் தயவின் விலங்கை விட்டு என்னை விடுவியுங்கள். நான் கைதியில்லையென்றால் என்னை இந்தப் பொற்கூட்டில் அடைத்து வைப்பதன் பிரயோஜனம் என்ன?"

உஸ்மான் அமைதியுடன், "மனத்திற்கு இதமற்ற பேச்சு ஏன் பேசவேண்டும்?" என்றான்.

ராஜபுத்திரன் கர்வத்துடன், "இந்தப் புஷ்பப் படுக்கையை விட்டு அகன்று சிறைச்சாலையின் கற் படுக்கையில் படுப்பதை ராஜபுத்திரர்கள் இழிவாகக் கருதமாட்டார்கள்" என்றான்.

"அந்தப் படுக்கை கெடுதலுக்குக் கொண்டுவிடுமானால்? அப்பொழுது?"

ராஜபுத்திரன் உஸ்மானைக் கடுமையாக ஒரு பார்வை பார்த்து, "நான் கத்லுகானுக்குச் சரியான தண்டனை விதிக்க முடியாவிட்டால் மரணத்தினால்தான் என்ன கெடுதல்?" என்றான்.

"யுவராஜ்! பொறுத்துப் பேசுங்கள். பட்டாணியர் சொன்னதைச் செய்ய தவறமாட்டார்கள்!"

ராஜபுத்திரன் சிரித்துக்கொண்டு, "சேனாதிபதி! நீங்கள் என்னைப் பயமுறுத்த இங்கே வந்திருந்தால் உங்கள் முயற்சி வீண் என்று அறியுங்கள்" என்றான்.

"ராஜபுத்திரா! நாமிருவரும் நம்மை இவ்வளவு தூரம் பரஸ்பரம் அறிந்துகொண்ட பிறகு வெறும் வீண் வார்த்தையை வளரவிடுவது இருவருடைய உத்தேசமும் இல்லை என்று நினைக்கிறேன் நான் உங்களிடத்தில் ஒரு முக்கியமான காரியமாக வந்திருக்கிறேன்".

ஜகத்சிங் கொஞ்சம் ஆச்சரிய மடைந்தான்.

"சொல்லலாமே!"

"நான் சொல்லப்போவது கத்லுகானின் உத்தரவுப்படி என்று நீங்கள் அறிய வேண்டியது அவசியம்".

"நல்லதுதான்".

"கேளுங்கள். ராஜபுத்திரர்களுக்கும் பட்டாணியருக்கும் நேர்ந்த இந்த யுத்தத்தில் இரு ஜாதியினருக்கும் பலத்த சேதம்".

"பட்டாணியருக்குச் சேத மேற்படுத்துவதே தான் இந்த யுத்தத்தின் நோக்கம்".

"உண்மை! இருவருடைய வீழ்ச்சியையும் மீறி, யுத்தத்தில் ஒருவர் வேரொடழிவது அவ்வளவு நல்லதா என்பதுதான் கொஞ்சம் கவனிக்கவேண்டிய விஷயம். மாந்தாரணக் கோட்டையை ஜயித்தவர்கள் அவ்வளவு பலம் குன்றிப்போனவர்களல்ல என்பதை நீங்கள் அறிந்திருப்பீர்கள்".

ராஜபுத்திரன் கொஞ்சம் சிரித்துவிட்டு, "அவர்கள் கெட்டிக்காரர்களே" என்றான்.

"எப்படியாகிலும் இருக்கட்டும். யார் கெட்டிக்காரர்கள் என்பது இப்பொழுது பேச்சல்ல. மொகலாய சக்ரவர்த்தியுடன் சதாகாலம் போர்புரிந்து வரும்வரை பட்டாணியருக்கு உத்கலத்தில் அமைதி இல்லை. ஆனால் மொகலாயரும் ஒருகாலும் பட்டாணியரை வென்று கைவசம் செய்து கொள்ளப்போவதில்லை. எங்களைப்பற்றி நான் புகழ்ச்சியாகப் பேச உத்தேசமில்லை. நீங்கள் ராஜ தந்திரி. நீங்களே பாருங்கள். டில்லியிலிருந்து உத்கலம் எவ்வளவு தூரம்? மான்சிங்குடைய புசுபலத்தால் டில்லி பாதுஷா ஒரு தடவை பட்டாணியரை வென்று விடுவதாகவே வைத்துக்கொள்வோம். அப்படி எவ்வளவு நாள் மொகலாயக் கொடி ஜயமாக அங்கே பறக்க முடியும்? மான்சிங் சேனையுடன் டில்லி திரும்பும் நிமிஷமே மறுபடியும் உத்கலம் பட்டாணியர் வசமாகி விடும் இல்லாவிட்டால், மறுபடியும் சைனியம் வரும்; மறுபடியும் உத்கலம் கைவசப்படும்; மறுபடியும் பட்டாணியரிடம் திரும்பிப் போகும். ஆகையால் திரும்பத் திரும்ப ராஜபுத்திரர் பட்டாணியருடைய ரத்தத்தால் பூமியை நனைப்பதில் என்ன உபயோகம்?"

"நான் என்ன செய்யக்கூடும்?"

"நான் வேறொன்றும் சொல்லவில்லை. என்னுடைய எஜமானரைச் சந்தியுங்கள்".

"எந்தமாதிரி சந்திப்பது?"

"இருபக்கங்களிலும் கொஞ்சம் விட்டுக் கொடுத்துக் கொள்ள வேண்டும். தம் புஜபலத்தால் ஜயித்த வங்க தேசத்தை கத்லுகான் விட்டுக் கொடுத்துவிடத் தயாராக இருக்கிறார். அக்பர் பாதுஷா ஒரிஸாவை விட்டுவிட்டுச் சைனியத்தை வாபஸ்பெற்று, இனிமேல்படையெடுக்காமல் இருக்கவேண்டும். இதனால் பாதுஷாவிற்கு ஒரு நஷ்டம் இல்லை. பட்டாணியருக்குத்தான் அதிக நஷ்டம். நாங்கள் கஷ்டப்பட்டு ஜயித்த இடத்தைத் திருப்பிக் கொடுக்கிறோம். ஒருநாளும் நிரந்தரமாகக் கைப்பற்ற முடியாத இடத்தைத்தான் அக்பர் பாதுஷா விட்டுக் கொடுக்கிறார்".

"முதல் தரமான பேச்சு. ஆனால் இதையெல்லாம் என்னிடம் சொல்லி என்ன பயன்? சேர்க்கை பிளவுகளுக்கு அதிகாரி மகாராஜா மான்சிங். அவருக்குத் தூது அனுப்புங்கள்".

"மகாராஜாவிடம் ஆள் அனுப்பினோம். துரதிருஷ்டவசமாக, யாரோ அவரிடம் பட்டாணியர் உங்களை கொன்று விட்டதாகச் சொல்லியிருக்கிறார்கள். அந்த விசனத்தாலும் கோபத்தாலும் மகாராஜா சமரஸம் என்ற வார்த்தையையே காதில் போட்டுக்கொள்ள மறுத்துவிட்டார். தூதன் சொன்னதை அவர் நம்பவில்லை. நீங்கள் சென்று சமரஸப் பேச்சை ஆரம்பித்தால் அவர் நிச்சயம் சம்மதிப்பார் என்று நினைக்க இடமிருக்கிறது'.

ராஜபுத்திரன் மறுபடியும் உஸ்மானின் முகத்தைக் கூர்ந்து கவனித்தான்.

"நீங்கள் சொல்லுவதை விளக்கிச் சொல்லவேண்டும். என் கைப்படக் கடிதம் எழுதியனுப்பினாலே மாராஜாவிற்கு நம்பிக்கை ஏற்பட்டுவிடும்; சந்தேகமில்லை. அப்படியிருக்க, என்னையே ஏன் நேரில் அனுப்ப விரும்புகிறீர்கள்?"

அதற்குக் காரணம் இருக்கிறது. எங்களுடைய நிலைமை மகாராஜாவிற்கு நன்றாகத் தெரியாது. நீங்கள் அருகேயிருந்தால் எங்களுடைய உண்மையான பலத்தை அறியக்கூடும் மேலும் நீங்கள் கொஞ்சம் அழுத்திச் சொன்னால் காரியம் சித்திப்பதற்கு லகுவாக இருக்கும். எழுத்துமூலம் இவையெல்லாம் நடவா. இத்தகைய ஏற்பாட்டில் முதல் பலன் நீங்கள் விடுதலையாவது. இதுவிஷயமாக நீங்கள் மிகவும் சிரத்தை எடுத்துக் கொள்வீர்கள் என்று நவாப் கத்லுகான் எதிர்பார்க்கிறார்.

"நான் தகப்பனாரிடம் செல்வதை மறுக்கமாட்டேன்".

"அதைக் கேட்டு நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். ஆனால் மற்றுமொரு வேண்டுகோள். நீங்கள் இந்தமாதிரி ஒரு சமரஸம் ஏற்படுத்துவதில் சித்திபெறாவிட்டால், மறுபடியும் இந்தக் கோட்டைக்குத் திரும்பிவரச் சம்மதிக்கவேண்டும்".

"நான் சம்மதிக்கிறேன் என்று வைத்துக்கொள்ளுங்கள். நான் வருவேன் என்று உங்களுக்கு என்ன நிச்சயம்?"

உஸ்மான் சிரித்துக்கொண்டு, "அது நிச்சயம். ராஜபுத்திரர்கள் சொன்ன சொல் தவறமாட்டார்கள் என்பது எல்லோருக்கும் தெரியுமே!" என்றான்.

ராஜபுத்திரன் சந்தோஷமடைந்தவனாய், "நான் என் பிதாவைக் கண்டு பேசியபிறகு தனியாகவே இக்கோட்டைக்குத் திரும்பிவரச் சம்மதிக்கிறேன்" என்றான்.

"இன்னுமொரு விஷயமும் அங்கீகாரம் செய்யவேண்டும். நீங்கள் உங்கள் தகப்பனாரைச் சந்திக்கும்பொழுது, உங்களுடன் வருகிற சமரஸ உத்தியோகஸ்தனையும் கூட வைத்துக் கொள்ளவேண்டும்"

"ஸேனாதிபதி ஸ்வாமி! அதையெல்லாம் அங்கீகாரம் செய்ய முடியாது. டில்லி சக்ரவர்த்தி பட்டாணியரை வெல்வதற்காகத்தான் எங்களை நியமித்திருக்கிறாரே ஒழிய ராஜி பேசுவதற்கல்ல; கட்டுப்பாடு செய்யவுமல்ல".

உஸ்மான் முகம் மாறுதல் அடைந்தது. அதில் சந்தோஷமும் வருத்தமும் கலந்து தோன்றின.

"யுவராஜ்! நீங்கள் ராஜபுத்திரத் தோரணையில்தான் பதில் சொல்லுகிறீர்கள். ஆனால் கொஞ்சம் யோசனைசெய்து பார்க்க வேண்டும். நீங்கள் விடுதலை அடைவதற்கு இதைத் தவிர வேறு வழியில்லை".

"நான் விடுதலையடைவதால் டில்லி பாதுஷாவிற்கு என்ன லாபம்? ராஜபுத்திர ஜாதியில் இன்னும் ராஜபுத்திரர்கள் இருக்கிறார்கள்".

"ராஜ குமாரா! என் யோசனையைக் கேளுங்கள். உங்கள் எண்ணத்தைக் கைவிடுங்கள்!"

"எதற்காக ஸாஹப்?"

"ராஜபுத்திரா! விளக்கிச் சொல்லுகிறேன்! உங்கள் மூலமாக ஏதாவது காரியசித்தியாகக் கூடும் என்ற எண்ணத்துடன்தான் நவாப் இத்தனை நாள் உங்களை ஆதரவுடன் வைத்திருந்தார். நீங்கள் இதில் வேறுவழி சென்றால் உங்கள் எல்லோருக்கும் கஷ்டம் ஏற்படும்".

"மறுபடியும் பயமுறுத்துகிறீர்களே! இப்பொழுது முதலே சிறைவாசம் ஏற்படலாம்".

"ராஜகுமாரா! நவாப் சிறையில் போடுவதுடன் நின்றால் நல்லது".

ராஜபுத்திரன் புருவம் துடித்தது. "இல்லாவிட்டால், வீரேந்திர சிங்கின் ரத்தப்பெருக்கை இன்னும் அதிகப்படுத்தட்டுமே!" ஜகத்சிங்கின் கண்களில் தீப்பொறிகள் பறந்தன.

"சரி, நான் போய்வருகிறேன். என் காரியத்தை நான் செய்து விட்டேன். கத்லுகானின் உத்தரவு வேறு ஆட்கள் மூலம் கிடைக்கும்".

உஸ்மான் வெளியே போய்விட்டான்.

சிறிது நேரம் கழித்து ஆயுதபாணிகளான நான்கு சேவகர்களுடன் ஒரு போர்வீரன் வந்தான்.

"என்ன வேண்டும்?" என்று கேட்டான் ஜகத்சிங்.

உங்கள் இருப்பிடத்தை மாற்றவேண்டும் என்றான் போர்வீரன்.

"இதோ, தயார், போ!" என்று சொல்லி ஜகத்சிங் அவனைப் பின்தொடர்ந்தான்.

## பனிரெண்டாம் அத்தியாயம்

## விசித்திர நகை

மகோத்ஸவம் ஆரம்பம் ஆயிற்று. கத்லுகானின் பிறந்த நாள். நாடகம், நாட்டியம், தானம், சாப்பாடு, குடி முதலியவைகளில் எல்லோரும் ஈடுபட்டார்கள். இரவில் ஒரே கோலாகலந்தான்; போர் வீரர்கள், சிப்பாய்கள், வேலைக்காரர்கள், ஜனங்கள், பிச்சைக்காரர்கள், நடிகர்கள், பாடகர்கள், வாத்தியக்காரர்கள், இந்திரஜால வித்தைக்காரர்கள், பூக்காரர்கள், வாசனை விற்போர்கள், வெற்றிலை விற்போர்கள், தின்பண்டங்கள் விற்போர்கள் – இவர்கள் எங்கே பார்த்தாலும் நிறைந்திருந்தார்கள். எங்கே போனாலும் விளக்கு வரிசைகள், சங்கீதம், வாசனை வெள்ளம், பானம், புஷ்பம், விசிறி; நவாபின் உல்லாச மாளிகையிலும் அதேமாதிரிதான். அறைகளிலெல்லாம் வெள்ளி விளக்குகள், ஸ்படிக விளக்குகள், சந்தன விளக்குகள் ஜாஜ்வல்யமாயிருந்தன. புஷ்பம் எங்கே பார்த்தாலும் கொட்டிக் கிடந்தது. ஜனங்கள் அங்கங்களி லெல்லாம் பூ! கணக்கற்ற வேலைக்காரிகள் சரிகை போட்ட ஆடைகளைப் பிரியப்பட்ட நீலம், மஞ்சள், சிவப்பு, கறுப்பு முதலிய பல வர்ணங்களில் அணிந்து, ஆபரணங்களில் விளக்கு வெளிச்சம் ஜொலிக்க, அங்குமிங்கும் போய்க் கொண்டிருந்தனர். அழகிகள் அறைகளில் தங்களைச் சிறப்புமிக்க வகையில் அலங்கரித்துக் கொள்வதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார்கள். நவாப் உல்லாஸ மாளிகையில் அமர்ந்த எல்லோரையும் மகிழ்வித்தார். நாட்டியமும் பாட்டும் நடந்து கொண்டிருந்தன. யார் யாருக்கு என்ன என்ன இஷ்டமோ அவையெல்லாம் நிறைவேறின.

புஷ்பவனத்தில் ஸ்தலபத்மம் போலும், பட்சிகளிடையே மயில்போலும், அந்தக் கட்டழகிகளின் நடுவே, ஒரு சுந்தரி அலங்காரம் செய்துகொண்டும் அறை அறையாகத் திரிந்து கொண்டு இருந்தாள். யாரும் அவள் எங்கே போனாலும் தடுக்கவில்லை. அப்பேர்ப்பட்ட அழகை ஈசுவரன் அவளுக்கு அளித்திருந்தார். கத்லுகான் அவளுக்கு அந்த ஸ்தானத்தையும் அலங்காரத்தையும் அளித்திருந்தான். ஆனால் அவளுடைய முகத்தில் கொஞ்சமேனும் சௌந்தரியச் செருக்கோ, அலங்காரப் பெருமையோ காணப்படவில்லை. சந்தோஷமோ சிரிப்போ கூடக் காணோம். முகத்தின் காந்தி கம்பீரமாக இருந்தது; சலனமற்ற கண்களில் ஒரு கடும் பார்வை இருந்தது.

விமலா அந்த அமர்க்களமான விழாவின் நடுவே இங்கு மங்கும் திரிந்துவிட்டுக் கடைசியாக நன்கமைந்த ஓர் அறையில் நுழைந்தாள். அப்படிப்பட்ட மகோத்ஸவ நாளிலும் அந்த அறையில் மட்டும் சோர்வு தாண்டவமாடிக் கொண்டிருந்தது. அறையின் ஒரு பக்கத்தில் ஒரு கட்டில் இருந்தது. தலையிலிருந்து கால்வரை போர்த்திக் கொண்டு யாரோ அதில் படுத்திருந்தார்கள். விமலா கட்டிலின் அருகே போய் நின்று கொண்டு மெதுவாக, "நான் வந்திருக்கிறேன்!" என்றாள்.

படுத்திருந்தவள் திடுக்கிட்டது போலப் போர்வையை முகத்திலிருந்து எடுத்தாள். போர்வையை எறிந்துவிட்டு, எழுந்து உட்கார்ந்து கொண்டாள். ஆனால் ஒன்றும் பேசவில்லை.

விமலா மறுபடியும், "திலோத்தமா! நான்தான்!" என்றாள்.

திலோத்தமை அப்பொழுதும் ஒன்றும் பதில் சொல்லவில்லை. விமலாவின் முகத்தைமட்டும் விடாமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

திலோத்தமை வெட்கத்தால் மெய்ம்மறந்த சிறு பெண் அல்ல. அப்பொழுது விமலா அவளுடைய இளைத்த தோற்றத்தைப் பார்த்து அவள் இன்னும் பத்து வயது அதிகமானவள் போலத் தென்பட்டதைக் கண்டாள். தேகம் அப்படி மாறிப்போயிருந்தது; முகம் அவ்வளவு மெலிவடைந்திருந்தது. முடியாத கூந்தல் தூசி படிந்து புரண்டு கொண்டிருந்தது. உடம்பில் ஆபரணம் ஒன்றும் அதிகமாக இல்லை.

விமலா மறுபடியும், "நான் வந்து நின்றுகொண்டு பேசுகிறேனே! ஏன் பதில் சொல்லமாட்டேன் என்கிறாய்?" என்று கேட்டாள்.

"என்ன பேசவேண்டுமோ பேசிவிட்டேனே! இன்னும் என்ன பேசக் கிடக்கிறது?" என்று திலோத்தமை தீனமான குரலில் பதில் சொன்னாள்.

அவள் குரலிலிருந்து திலோத்தமை அழுதுகொண்டிருந்தாள் என்று விமலா அறிந்தாள். தலையில் கைவைத்து முகத்தை நிமிர்த்திப் பார்த்தாள்; கண்ணீர் முகத்தில் வெள்ளமாகப் பெருகிக் கொண்டிருந்தது. புடைவையைத் தொட்டுப் பார்த்தாள்; அது முழுவதும் நனைந்து போயிருந்தது. அவள் தலைக்கு வைத்துக் கொண்டு படுத்திருந்த தலையணையைத் தொட்டுப் பார்த்தாள்; அதுவும் ஈரமாக இருந்தது.

"இப்படி இரவும் பகலுமாக அழுதால் தேகம் எவ்வளவு நாளைக்குத் தாங்கும்?"

"தாங்கி என்ன ஆகவேண்டும்? இவ்வளவு நாள் ஏன் தாங்கிற்று என்று தான் எனக்கு ஆத்திரம் வருகிறது" என்று திலோத்தமை கோபத்துடன் சொன்னாள்.

விமலா பதில் சொல்லவில்லை. அவளும் அழ ஆரம்பித்தாள்.

சிறிது நேரம் கழித்து விமலா ஒரு நீண்ட பெரு மூச்சுவிட்டு, "இப்பொழுது ஒரு வழி ஏற்பட்டிருக்கிறது" என்றாள்.

சந்தோஷமற்ற பார்வையுடன் திலோத்தமை விமலாவின் அலங்காரங்களை ஒருதரம் பார்த்துவிட்டு, "வழியிருந்து என்ன பிரயோஜனம்?" என்றாள்.

"குழந்தாய்! இன்று கத்லுகானுக்குப் பிறந்த தினம்; உனக்குத் தெரியாதா? தனக்குச் சாவகாசம் இல்லாததாலோ, அல்லது நமக்குக் கொஞ்சம் சாவகாசம் அளிக்கவேண்டுமென்று அவன் எண்ணியதாலோ, இதுவரை அந்தத் துராத்மா நம்மிடம் வரவில்லை. இன்று தான் நமக்குக் கடைசி நாள். இன்று நாம் நாட்டிய சாலையில் தென்படாவிட்டால் நமக்கு ஆபத்துதான்".

"என்ன ஆபத்து?"

"ஒரே அடியாக அதைரியப்பட்டுப் போய் நிராசையாக இருக்கக் கூடாது. நம் உயிர் இருக்கிற வரையிலும் நாம் செய்ய வேண்டிய தர்மம் இருக்கிறது. பிராணன் இருக்கிற வரையில் தர்மத்தைக் காப்பாற்ற வேண்டும்"

"அப்படியானால், அம்மா, இந்த உன் அலங்காரத்தை எல்லாம் நீக்கு. அதை என்னால் கண்ணெடுத்துப் பார்க்க முடியவில்லை".

விமலா கொஞ்சம் சிரித்துக்கொண்டு, "கண்மணி! என்னுடைய நகைகள் எல்லாவற்றையும் நன்றாகப் பார்க்காமல் என்னை நீ திட்டாதே!" என்று சொல்லிவிட்டுத் தன் புடைவையில் மறைத்து வைத்திருந்த ஒரு கூர்மையான கத்தியை வெளியே எடுத்தாள். விளக்கு வெளிச்சத்தில் அதன் சாணையிடப்பட்ட பக்கம் மின்னல் போலப் பிரகாசித்தது. திலோத்தமை ஆச்சரியமடைந்தாள்; அவள் முகமும் மாறிற்று.

"இது எங்கே கிடைத்தது?"

"நேற்று முதல் அந்தப்புரத்தில் ஒரு புது வேலைக்காரி வந்திருக்கிறாள் தெரியுமா?"

"பார்த்தேன்; ஆஸ்மானிதான்!"

"ஆஸ்மானியின் மூலமாக, இதை அபிராமஸ்வாமியிடமிருந்து வரவைத்தேன்.

திலோத்தமை மௌனமாகிவிட்டாள். அவளுடைய ஹிருதயம் துடித்தது.

சிறிது நேரம் கழித்து விமலா திலோத்தமையைப் பார்த்து, "நீ இன்று இந்த வேஷத்தை மாற்றமாட்டாயா?" என்று கேட்டாள்.

"மாட்டேன்!"

"நாட்டிய சாலைக்குப் போகமாட்டாயா?"

"மாட்டேன்!"

"சரி, நான் சொல்வதைச் சாவதானமாகக் கேள்: நீ வெளியே தப்பிப்போவதற்கு வழிதேடியிருக்கிறேன்".

திலோத்தமை விமலாவை ஆச்சரியத்துடன் பார்த்தாள்.

விமலா அவள் கையில் உஸ்மான் கொடுத்த மோதிரத்தைக் கொடுத்து, "இந்த மோதிரத்தை வைத்துக்கொள்; நாட்டிய சாலைக்குப் போகவேண்டாம். நடுநிசிக்குமுன் உற்சவம் முடிவடையாது. அதுவரை பட்டாணியனைத் தடுத்து வைத்துக் கொள்ள என்னால் முடியும். நான் உன் ஒன்றுவிட்ட தாய் என்பது பட்டாணியனுக்குத் தெரியும். ஆகையால் நான் அவனை முடிவு வரையில் உன்னைப் பற்றிக் கேட்காமல் வைத்துக் கொள்ள முடியும் நடுநிசியில் அந்தப்புரவாசலுக்குப் போ! அங்கே ஓர் ஆள் உனக்கு இதே மாதிரி ஒரு மோதிரத்தைக் காட்டுவான் நீ பயமின்றி அவனுடன் போ. நீ எங்கே போகவேண்டு மென்கிறாயோ, அங்கே அவன் உன்னைக் கொண்டுபோய் விடுவான். அபிராமஸ்வாமியின் குடிசைக்கு உன்னைக் கூட்டிக் கொண்டு போகும்படி அவனிடம் சொல்" என்றாள்.

திலோத்தமை விமலா சொன்னதைக் கேட்டுத் திடுக்கிட்டாள். ஆச்சரியத்தலோ ஆனந்தத்தாலோ கொஞ்சநேரம் அவளால் பேசவே முடியவில்லை. பிறகு, "இதென்ன கதை, இதை யாரிடமிருந்து பெற்றாய்?" என்று கேட்டாள்.

"அது பெரிய கதை! வேறொரு சமயம் சாவகாசமாகச் சொல்லுகிறேன். இப்பொழுது நான் சொல்வதைத் தயங்காமல் செய்".

"நீ - உன்கதி என்ன ஆவது? நீ எப்படி வெளியே வருவாய்?"

"என்னைப் பற்றிக் கவலைப்படாதே. நான் ஏதாவதொரு உபாயம் செய்து காலையில் வெளியேறி உன்னிடம் வந்து சேருகிறேன்".

திலோத்தமைக்கு விமலா இவ்வாறு உயிர் அளித்தாள். ஆனால் அப்படிச் செய்வதில் தன் விடுதலைக்கே வழியின்றிச் செய்து கொண்டாள் என்பது திலோத்தமைக்குத் தெரியாது. வெகுநாளாகத் திலோத்தமையின் முகத்தில் சந்தோஷக் குறியே இல்லை. விமலாவின் வார்த்தைகளைக் கேட்டதும், அவள் முகத்தில் சந்தோஷத்தின் மலர்ச்சி ஏற்பட்டது.

அதைக் கண்டு விமலா தனக்குள் உள்ளப்பூரிப்புக் கொண்டாள். கண்ணீரால் அடைபட்ட குரலில், "நான் போகட்டுமா, கண்மணி?" என்றாள்.

திலோத்தமை கொஞ்சம் சங்கோசத்துடன், "கோட்டையின் சமாசாரம் முழுவதும் தெரிகிறதே உனக்கு! நம்மைச் சேர்ந்தவர்கள் எங்கே? யார் யார் என்ன ஆனார்கள்? சொல்லிவிட்டுப் போயேன்" என்றாள்.

அந்த ஆபத்து நிறைந்த நிலைமையிலும் திலோத்தமையின் மனத்தில் ஜகத்சிங்கின் நினைவு இருந்ததை விமலா கண்டாள். விமலா ராஜபுத்திரனின் பெயர் கூட வரவில்லை. அதைத் திலோத்தமையிடம் சொன்னால் அவள் மனம் பொசுங்கியே போகும். ஆகையால் அதை யெல்லாம் ஒன்றும் சொல்லாமல், "ஜகத்சிங் கோட்டைக்குள் தான் இருக்கிறார்; சௌக்கியமாக இருக்கிறார்" என்றாள் விமலா.

திலோத்தமை ஒன்றும் சொல்லவில்லை.

விமலா கண்களைத் துடைத்துக்கொண்டே அவ்விடத்தை விட்டு வெளியே போனாள்.

## பதின்மூன்றாம் அத்தியாயம்

## மோதிர மகிமை

விமலா வெளியே போன பிறகு, தனியாக அறையில் உட்கார்ந்து கொண்டு திலோத்தமை, நடந்ததை யெல்லாம் பற்றி யோசிக்கலானாள். அதில் சுகமும் துக்கமும் கலந்திருந்தன. துராத்மாவாகிய பட்டாணியனின் கையிலிருந்து விடுபடுகிறோம் என்ற எண்ணந்தான் அடிக்கடி அவள் மனத்தில் எழுந்தது. விமலா சொன்னது கதையல்ல; அவள் தன்னிடம் எல்லையற்ற அன்பு வைத்தவள்; வெளியே போவதற்கு வேண்டிய உபாயம் செய்திருக்கிறாள்; நிச்சயம் வெளியேறித் தப்பிவிடலாம் - இந்த எண்ணங்கள் அடிக்கடி எழ எழ அவள் மனம் பரம சந்தோஷமடைந்தது. பிறகு, விடுதலையடைந்தபின் எங்கே போவது? தகப்பன் வீடு எங்கிருக்கிறது? என்ற எண்ணம் எழுந்தது; எழவே திலோத்தமை அழ ஆரம்பித்தாள். இந்த எல்லா எண்ணங்களையும் அமுக்கிக்கொண்டு மனத்தில் மற்றோர் எண்ணம் தோன்றியது. ராஜகுமாரர் சௌக்கியமாக இருக்கிறார்; எங்கே இருக்கிறார்? எந்த மாதிரி இருக்கிறார்? அவரும் கைதியா? என்று எண்ணிக் கண் கலங்கினாள். என்ன துரதிர்ஷ்டம்! அவரும் என்னைப்போல் கைதியா? அவர் காலடியில் பிராணனை விடுவோமென்றால் அதுகூட முடியாது போலிருக்கிறதே? என்று எண்ணினாள். மறுபடியும், அவர் எந்தச் சிறையில் இருக்கிறார்? அது எப்படிப்பட்டது? அங்கே வேறு யாராவது போகமுடியுமோ? சிறையிலிருந்துகொண்டு அவர் என்ன செய்கிறாரோ? என்னைப் பற்றி நினைக்கிறாரா? நான்தானே அவருக்கு ஏற்பட்டிருக்கும் கஷ்டத்திற்கெல்லாம் காரணம்? என்று எண்ணலானாள்...

'ஒருவேளை என்னை மறந்திருப்பாரோ? நான் மிலேச்சன் வீட்டில் இருக்கிறேன் என்று என்னை வெறுத்து விட்டாரோ? என் நினைவையே மனத்திலிருந்து அகற்றி விட்டாரோ? இல்லை, இராது! அப்படிச் செய்யமாட்டார். அவரும் கைதி; நானும் கைதி. அதனால் வெறுப்பேற்படுவதற்குக் காரணம் இல்லை. என்னை ஒருவேளை சந்தித்தாள் அடையாளம் கண்டுகொள்ள மாட்டாரோ? அப்படி அங்கீகரிக்காவிட்டால், அவர் காலடியிலேயே பிராணனை விடுகிறேன். அவரை எப்பொழுது பார்க்க முடியுமோ! அவர் எப்படி விடுதலையடையப் போகிறார்? நான் விடுதலை யடைந்து என்ன சாதிக்கப் போகிறேன்? இந்த மோதிரத்தை அம்மா எங்கிருந்து சம்பாதித்தாள்?... யார் என்னைக் கூட்டிக் கொண்டு போவார்கள்? நல்லது; அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்: ஒரு தடவை ராஜபுத்திரரைப் பார்க்க வேண்டுமென்று!... ஆமாம்? நேரில் கண்டால் என்ன சொல்லுவது?'

இந்த மாதிரியாக என்னன்னவோ யோசனைகள் செய்து கொண்டிருந்தாள் திலோத்தமை அப்பொழுது ஒரு வேலைக்காரி உள்ளே வந்தாள். "என்ன பொழுது" என்று அவளைக் கேட்டாள்.

"இரண்டாம் ஜாமம் ஆகிவிட்டது" என்று அவள் சொன்னாள். அவள் வெளியே போவதற்காகக் காத்திருந்தாள். வேலைக்காரி வந்த காரியத்தை முடித்துக்கொண்டு வெளியே போனதும், திலோத்தமை விமலா கொடுத்த மோதிரத்தை எடுத்துக் கொண்டு அறையை விட்டுக் கிளம்பினாள். அவள் மனத்தில் சந்தேகம் எழுந்தது; உடல் நடுங்கிற்று; முகம் வெளுத்தது. எப்படியோ அந்தப்புர வாசலை அடைந்தாள். எல்லோரும் ஆனந்தமாக விளையாட்டுக்களில் ஈடுபட்டிருந்தார்கள். அவளை ஒருவரும் கவனிக்கவில்லை. கண்களால் பார்த்தவர்கள் கூட மனத்தில் நினைக்கவில்லை. எல்லோரும் தன்னையே அவள் பார்ப்பதாக எண்ணிக் கொண்டாள் திலோத்தமை. வேலைக்காரர்கள் சந்தோஷத்தில் உன்மத்தர்களாக இருந்தார்கள்; சிலர் தூங்கினார்கள்; சிலர் விழித்துக் கொண்டிருந்தார்கள்; சிலர் மயங்கிக் கிடந்தார்கள். ஒருவரும் அவளைக் கவனிக்கவில்லை. ஒரே ஓர் ஆள் மாத்திரம் வேலைக்கார வேஷத்தில் அவளை உற்றுப் பார்த்தவண்ணம் நின்றுகொண்டிருந்தான். திலோத்தமையைக் கண்டதும் அவன், "உங்களிடம் மோதிரம் இருக்கிறதா?" என்று கேட்டான்.

திலோத்தமை பயத்துடன் விமலா கொடுத்த மோதிரத்தைக் காண்பித்தாள். அதை நன்றாகக் கவனித்துப் பார்த்துவிட்டுத் தன் கையிலிருந்த மோதிரத்தைத் திலோத்தமைக்குக் காட்டினான். "என்னுடன் வாருங்கள்; ஒன்றும் யோசனை செய்ய வேண்டாம்" என்றான்.

சஞ்சலமடைந்த மனத்துடன் திலோத்தமை அவனைப் பின் தொடர்ந்தாள். வழியில் காவலாளிகள் குடிவெறியில் உளறிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் யாரும் போனவர்களைத் தடுக்கவில்லை. வேலைக்காரன் அவளைக் கூட்டிக்கொண்டு, அநேக வாசல்கள், அநேகக் கட்டுகள், முற்றங்களைத் தாண்டிக் கோட்டை வாசலுக்கு வந்தான்.

"இப்பொழுது எங்கே போகவேண்டும்? உத்தரவாகட்டும்! கூட்டிக்கொண்டு போகிறேன்" என்றான் வேலைக்காரன்.

விமலா சொன்னது திலோத்தமைக்கு ஞாபகத்தில் இல்லை. முதலில் அவளுக்கு ஜகத்சிங்கின் ஞாபகந்தான் வந்தது. ராஜபுத்திரன் இருக்கிற இடத்திற்குக் கூட்டிக் கொண்டு போ! என்று சொல்ல வேண்டுமென்று எண்ணம். ஆனால் எப்பொழுதும் வெட்கம் என்ற விரோதி வாயைப் பொத்திவிட்டது. சும்மா இருந்துவிட்டாள். அவன் மறுபடியும், "எங்கே போகவேண்டும்?" என்று கேட்டான்.

திலோத்தமைக்கு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை. உடல் நடுக்கமெடுத்தது; கண் மங்கிற்று; காதில் ஒன்றும் விழவில்லை; வாயிலிருந்து வார்த்தை வரவில்லை. வேலைக்காரன் காதில் அறைகுறையாக, "ஜகத்சிங்!" என்றாள்.

"ஜகத்சிங் இப்பொழுது சிறையில் அடைபட்டுக் கிடக்கிறார். யாரும் அவரைப் பார்க்க முடியாது. ஆனால் நீங்கள் எங்கே போக விரும்புகிறீர்களோ அங்கே கொண்டு போய் விடும்படியாக எனக்கு உத்தரவு" வாருங்கள்.

வேலைக்காரன் மறுபடியும் கோட்டைக்குள் பிரவேசித்தான். திலோத்தமைக்கு, என்ன செய்கிறோம், எங்கே போகிறோம் என ஒன்றும் தெரியவில்லை நடைப்பதுமை போல, அவன் பின்னாலேயே சென்றாள். சிறைச்சாலைக்குச் சென்று பார்த்தபொழுது, எங்கும்போல அங்கேயும் காவலாளர்கள் மகிழ்ச்சி விலாஸங்களில் மூழ்கியிராமல், ஜாக்கிரதையாகக் காவல் புரிந்துகொண்டிருந்தார்கள். திலோத்தமையைக் கூட்டிக்கொண்டு போனவன் ஒரு சேவகனைப் பார்த்து, "ராஜபுத்திரர் எங்கே இருக்கிறார்?" என்று கேட்டான். அவன் அந்த இடத்தைக் கையால் சுட்டிக் காட்டினான். "தூங்குகிறாரா? விழித்துக்கொண்டு இருக்கிறாரா?" என்று கேட்டான் திலோத்தமையின் ஆள். மற்றவன் சிறைச்சாலை வாசல்வரையில் சென்று பார்த்துவிட்டுத் திரும்பிவந்து "விழித்துக் கொண்டுதான் இருக்கிறார்" என்றான்.

"சிறையறையின் கதவைத் திற. இந்த அம்மாள் கைதியை நேரில் கண்டுகொள்ள வேண்டும்".

காவலாளி ஆச்சரியமடைந்து, "அவள் யார்? அந்த மாதிரி ஒன்றும் உத்தரவு கிடையாதே உனக்குத் தெரியாதா?" என்றான்.

மோதிரத்தை வைத்திருந்தவன் காவலாளிக்கு உஸ்மானின் மோதிரத்தைக் காட்டினான். உடனே அவன் தலைவணங்கிக் கதவைத் திறந்துவிட்டான்.

ராஜகுமாரன், அறையின் நடுவில், ஒரு சாதாரணமான கட்டிலின் மேல் படுத்துக்கொண்டிருந்தான். கதவு திறந்த சத்தத்தைக் கேட்டு, யார் என்று பார்க்க விரும்பினவனாய்த் திரும்பிப் பார்த்தான். திலோத்தமை வாசற்படியண்டை நின்றுவிட்டாள். உள்ளே போக முடியவில்லை. கதவைப் பிடித்துக் கொண்டு நின்றாள்.

திலோத்தமை உள்ளே நுழையாமல் நின்றதைக் கண்ட மோதிரக்காரன், "ஏன், இங்கே ஏன் தாமதிக்கிறீர்கள்?" என்றான். அப்பொழுதும் அவள் அசையவில்லை.

"உள்ளே போகவில்லையென்றால் திரும்பி வாருங்கள். அங்கே நிற்கக்கூடாது" என்று அவன் மறுபடியும் சொன்னான்.

திலோத்தமை திரும்புவதற்கு முயன்றாள்; ஆனால் திரும்பவும் முடியவில்லை. அவள் என்ன செய்வாள்?

காவலாளி பயந்து போனான். தன்னையறியாமலே திலோத்தமை நகர்ந்து உள்ளே போய்விட்டாள்.

அறைக்குள் சென்று ராஜபுத்திரனைக் கண்ட நிமிஷமே, மறுபடியும் அவளால் அசைய முடியவில்லை. அருகில் இருந்த ஒரு கதவைப் பிடித்துக்கொண்டு தலைகுனிந்த வண்ணம் நின்றாள்.

முதலில் ராஜபுத்திரனால் திலோத்தமையை அடையாளம் கண்டுகொள்ளவே முடியவில்லை. யாரோ பெண்பிள்ளை அங்கே வந்ததைக் கண்டு ஆச்சரியமடைந்தான். திலோத்தமை அருகே நெருங்கவில்லை. தூரத்திலேயே தலைகுனிந்துகொண்டு நின்றாள். ராஜபுத்திரன் படுக்கையை விட்டு எழுந்து அருகில் வந்து பார்த்தான்; அறிந்துகொண்டான்.

ஒருகணம் இருவர் கண்களும் சந்தித்தன. அதே நிமிஷம் திலோத்தமையின் கண்களில் பூமியை நோக்கின. ஆனால் சரீரம் நடுங்கிற்று. ஒரு நிமிஷம் ராஜபுத்திரனின் காலடியில் விழுந்து விடுவாள்போலத் தோன்றிற்று.

ராஜபுத்திரன் கொஞ்சம் பின்னால் நகர்ந்து கொண்டான். மந்திரத்தில் கட்டுப்பட்டவள்போலத் திலோத்தமை அசைவற்று நின்றாள். அந்த நிமிஷம் மலர்ந்த அவளுடைய ஹ்ருதய பத்மம் சட்டென்று சுருங்க ஆரம்பித்தது

"வீரேந்திர சிங்கின் பெண்ணா?" என்றான் ராஜபுத்திரன்.

திலோத்தமையின் ஹ்ருதயம் நின்றது. வீரேந்திரசிங்கின் பெண்! எதற்காக இப்படிப் பேசுவது? ஜகத்சிங் திலோத்தமையின் பெயரையே மறந்துவிட்டானா?

இருவரும் ஒருகணம் மௌனமாக இருந்தார்கள்.

மறுபடியும் ராஜபுத்திரன், "இங்கே வந்தது ஏன்?" என்று கேட்டான்.

இங்கே வந்தது ஏன்! என்ன கேள்வி! திலோத்தமையின் தலை கிர்ரென்று சுழன்றது. நாலு திக்குகள், அறை, படுக்கை, விளக்கு எல்லாம் சுற்றின. சட்டென்று எதையோ பிடித்துக் கொண்டாள், கீழே விழாமலிருக்க.

ராஜபுத்திரன் பதிலை எதிர்பார்த்துக் கொண்டு நின்றான். "யார் பதில் சொல்லுவது? பதில் வராததைக் கண்டு ராஜபுத்திரன், இங்கே இருந்தால் ஆபத்து உனக்கு, திரும்பிப் போ! நடந்ததை மறந்துவிடு!" என்றான்.

திலோத்தமை, மரத்திலிருந்து பிடியிழந்து விழும் கொடி போல, பூமியில் பொத்தென்று விழுந்தாள்.

## பதினான்காம் அத்தியாயம்

## மயக்கம்

ராஜபுத்திரன் கீழே குனிந்து பார்த்தான். திலோத்தமையின் மூச்சுத் தென்படவில்லை. தன் வஸ்திரத்தைக் கொண்டு விசிறினான். அப்பொழுதும் பிரக்ஞை ஏற்பட்டதற்கு ஒரு விதமான அடையாளமும் இல்லாதது கண்டு, காவலாளியைக் கூப்பிட்டான்.

திலோத்தமையுடன் வந்த சேவகன் உள்ளே வந்தான். ராஜபுத்திரன் அவனைப் பார்த்து, "இவள் அகஸ்மாத்தாக மூர்ச்சை அடைந்து விட்டாள். இவளுடன்கூட வந்திருக்கிறவர்களைக்கொண்டு சுச்ருஷை செய்யச் சொல்" என்றான்.

"அந்த அம்மாளுடன் கூட நான்மட்டுந்தான் வந்தேன்".

ராஜபுத்திரன் ஆச்சரியத்துடன், "நீ மட்டுமா?" என்றான்.

"ஆமாம்; வேறு யாரும் வரவில்லை".

"அப்பொழுது, என்ன செய்கிறது? யாராவது வேலைக்காரியைக் கூப்பிடு".

வேலைக்காரன் வெளியே போனான்.

அவனை ராஜபுத்திரன் திரும்பக்கூப்பிட்டு, "இந்தச் சமாசாரம் யாருக்கும் தெரியக்கூடாது; அனாவசியமாக தடபுடலாகிவிடும். நீ ஒன்று செய்; உடனே நவாபின் மகளிடம் சென்று இவ்விஷயத்தைத் தெரிவி" என்றான்.

வேலைக்காரன் வேகமாக வெளியே போனான். தன்னால் இயன்றவரை ராஜபுத்திரன் திலோத்தமைக்குச் சுச்ருஷை செய்தான். அப்பொழுது ராஜபுத்திரன் தன் மனத்தில் என்ன எண்ணினானோ, யார் கண்டார்கள்? கண்ணில் ஜலம் வந்ததோ, என்னவோ எப்படிச் சொல்வது?

ராஜகுமாரனுக்கு இன்னது செய்வதென்று தெரியவில்லை. அயேஷாவிற்குத் தகவல் எட்டாவிட்டால் அல்லது அவளால் ஒன்றும் செய்ய முடியாவிட்டால், என்ன செய்வது என்று யோசிக்கலானான்.

திலோத்தமைக்குக் கொஞ்சம் கொஞ்சமாகப் பிரக்ஞை வந்தது. அதேசமயம் வேலைக்காரனுடன் இரண்டு பெண்கள் வருவதைக் கண்டான். ஒருத்தி பர்தாப்பெண். ஆனால், தூரத்திலே, அவளுடைய உயர்ந்த சரீரத்தையும் அழகிய நடையையும் கண்டு, அயேஷாவே வந்துவிட்டாள் என்று ராஜபுத்திரன் அறிந்தான்.

இருவரும் உள்ளே நுழைய வந்தபொழுது, காவலாளி தடுத்துவிட்டான். "நான் எப்படி விடுகிறது, உத்தரவில்லாமல்?" என்றான்.

அதைக்கேட்டு அயேஷா தன் முகத்திரையை அகற்றிவிட்டு "காவலாளி! என்னை உள்ளே விடு! உனக்கு ஆபத்து ஏற்பட்டால் நான் ஜவாப்தாரி" என்றாள்.

அவனுக்கு அயேஷாவைத் தெரியாது; ஆனால் கூட இருந்த பணிப்பெண் அவன் காதில் சொன்னாள். அவன் ஆச்சரியமடைந்தவனாய் கைகூப்பி, "அடியேனை மன்னிக்க வேண்டும். நீங்கள் எங்கே வேண்டுமானாலும் போகலாம்!" என்றான்.

அயேஷா உள்ளே சென்றாள். அப்பொழுது அவள் சிரிக்கவில்லை. ஆனால் அவள் புன்சிரிப்பின் பொலிவு அந்தச் சிறையையே மேன்மைப்படுத்தியது. அவள் ராஜபுத்திரனுக்கு மரியாதையாக நமஸ்காரம் செய்துவிட்டு, "ராஜபுத்திரா, என்ன விசேஷம்?" என்றாள்.

ராஜபுத்திரன் என்ன பதில் சொல்லுவான்? பதில் சொல்லாமல், பூமியில் கிடந்த திலோத்தமையைக் கையால் சுட்டிக் காட்டினான்.

அவளைப் பார்த்துவிட்டு அயேஷா, "அவள் யார்?" என்றாள்.

ராஜபுத்திரன் சங்கோசத்துடன், "வீரேந்திரசிங்கின் பெண்!" என்றான்.

உடனே அயேஷா திலோத்தமையை மடியில் எடுத்துக் கொண்டாள். அவள் அப்படிச் செய்தது மிகவும் அழகாக இருந்தது. வேலைக்காரியிடமிருந்து ஷர்பத் பன்னீர் முதலியன வாங்கித் திலோத்தமைக்குச் சுச்ரஷை செய்தாள் வேலைக்காரி விசிறினாள். அயேஷாவின் கை பட்டதால் வந்தாற்போல், திலோத்தமைக்குப் பிரக்ஞை வந்தது.

கண்திறந்து நான்கு பக்கமும் பார்த்தவுடன் திலோத்தமைக்கு முன் நடந்தது நினைவிற்கு வந்தது எழுந்திருந்து உட்கார்ந்தாள். அந்த அறையை விட்டு வெளியே போய் விடவேண்டுமென்று தோன்றிற்று ஆனால் தேகம் இடங்கொடுக்கவில்லை; அவளால் எழுந்து நிற்கக்கூட முடியவில்லை.

அயேஷா அவளுடைய கையைத் தன் கையிலெடுத்துக் கொண்டு, "தோழி ஏன் பயப்படுகிறாய்? நீ இப்பொழுது மிகவும் துர்ப்பலமாக இருக்கிறபடியால் நீ என் வீட்டில் கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொள்ளவேண்டும் பிறகு நீ இஷ்டப்பட்ட இடத்திற்குப் போகலாம்" என்றாள்.

திலோத்தமை பதில் சொல்லவில்லை.

"நீ என்னை நம்பு; உங்களுடைய விரோதியின் பெண் என்பதற்காக என்னிடம் அவநம்பிக்கை கொள்ளாதே! உன் விஷயம் ரகசியமாகவே இருக்கும். இப்பொழுது என் அறைக்குப் போ; பிறகு, எங்கே போகவேண்டுமோ போகலாம்" என்று அயேஷா மறுபடியும் சொன்னாள்.

திலோத்தமைக்கு அயேஷாவின் குரலில் நம்பிக்கை ஏற்பட்டது ஆனால் அவளால் நடக்கக்கூட முடியவில்லை.

"உன்னால் இப்போது உதவியில்லாமல் நடக்க முடியாது. இந்த வேலைக்காரியின்மேல் சாய்ந்துகொண்டு மெதுவாகப் போ!" என்றாள் அயேஷா.

வேலைக்காரி தாங்கிவர, திலோத்தமை மெல்ல நடந்து சென்றாள். ராஜபுத்திரன் ஒன்றும் சொல்லாமல் அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். உனக்கும் எனக்கும் இவ்வளவுதான் பிராப்தம் என்று மனத்திற்குள் சொல்லிக் கொண்டான். பிறகு நீண்ட பெருமூச்சு விட்டான். திலோத்தமை வாசற்படியில் நின்றதைப் பார்த்து, முகத்தைத் திருப்பிக்கொண்டான். அயேஷா ஜாடையை அறிந்து வேலைக்காரியைப் பார்த்து, "திலோத்தமையைக் கொண்டுபோய் என் அறையில் விட்டுவிட்டு மறுபடியும் வந்து என்னைக் கூட்டிக்கொண்டு போ!" என்றாள்.

மோதிரம் ஏந்தியவன் திலோத்தமையிடம் நெருங்கி, "நான் போகலாமா?" என்றான்.

திலோத்தமை பேசவில்லை. வேலைக்காரி "சரி!" என்றாள்.

"ஆனால் உங்களிடம் இருக்கும் மோதிரத்தைக் கொடுத்தால் நல்லது".

திலோத்தமை மோதிரத்தை எடுத்து அவனிடம் கொடுத்தாள். வேலைக்காரன் விடை பெற்றுக்கொண்டு போய்விட்டான்.

## பதினைந்தாம் அத்தியாயம்

## வாய்விட்டுச் சொன்னது

திலோத்தமையும் வேலைக்காரியும் அறையை விட்டு வெளியே போனதும் அயேஷா படுக்கையில் உட்கார்ந்து கொண்டாள். அவள் உட்காருவதற்கு அங்கே வேறு ஆசனம் இல்லை. ஜகத்சிங் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தான்.

அயேஷா தன் தலையிலிருந்து ஒரு ரோஜாப்பூவை எடுத்து அதன் இதழ்களைப் பிய்த்துக் கொண்டே, "ராஜபுத்திரா! நீங்கள் என்னிடம் ஏதோ சொல்ல விரும்புகிறீர்கள் என்று தெரிகிறது. என்னால் உங்களுக்கு ஆகவேண்டியது ஏதாவது உண்டா? இருந்தால் சங்கோசமின்றிச் சொல்லுங்கள். நான் உங்கள் காரியத்தை முடித்துக் கொடுக்கிறேன். அதில் எனக்கு ரொம்ப சந்தோஷம் ஏற்படும்" என்று ஆரம்பித்தாள்.

"நவாப் குமாரி! இப்பொழுது எனக்கு ஒன்றுமே ஆக வேண்டியதில்லை. ஆகையால் உங்களை நேரில் பார்க்க வேண்டுமென்ற அபிப்பிராயமும் இல்லை. நான் இருக்கும் நிலையில் நான் உங்களை மறுபடியும் சந்திப்பேன் என்றும் நினைக்கவில்லை. இதுதான் கடைசிச் சந்திப்பு என்று எனக்குத் தோன்றுகிறது. நான் உங்கள்பால் எவ்வளவு கடமைப்பட்டிருக்கிறேன் என்பதை வார்த்தைகளால் சொல்லி முடியுமா? அதற்காக எப்பொழுதாவது உங்களுக்குக் கைம்மாறு செய்யக்கூடுமென்று நான் நினைக்கவில்லை. ஆனால் இது தான் என் பிரார்த்தனை; என்றாவது, எங்கேயாவது, என்னால் உங்களுக்கு ஏதாவது ஆகவேண்டியிருந்தால், மனம்விட்டுக் கேட்க வேண்டும்!"

ராஜபுத்திரனின் குரலில் இருந்த வேதனையும் நிராசையும் அயேஷாவைக் கிலேசப்படுத்தின.

"நீங்கள் ஏன் இவ்வளவு மனமுடைந்து போகிறீர்கள்? ஒரு நாள் உண்டாகும் கெடுதல் அடுத்த நாள் விலகும்" என்றாள் அயேஷா.

"நான் மனமுடைந்து போகவில்லை. ஆனால் இனிமேல் இச்சைகள் வைத்துக்கொள்ள எனக்கு மனமில்லை. இந்த வாழ்க்கையை முடிப்பதைத் தவிர வேறாரு விருப்பமும் எனக்கு இல்லை. இந்தச் சிறையை விட்டு மீளவேண்டுமென்று கூட எனக்கு ஆசை கிடையாது. என் மனத்தை வாட்டும் துயரத்தின் அளவை நீங்கள் அறிய முடியாது; என்னால் சொல்லவும் முடியாது".

ராஜபுத்திரன் பேசிய ஏக்கக்குரல் அயேஷாவிற்கு ஆச்சரியத்தை விளைவித்தது அவள் மனத்தில் ஓர் இரக்கம் ஏற்பட்டது. அப்பொழுது, தான் நவாபின் மகள் என்பதை அவள் மறந்தாள். தான் வெகு தூரத்திலிருப்பவள் என்பதையும் மறந்தாள். அன்பு பொங்கிய மனத்துடன் அப்பெண்ணரசி, தானாகவே தன் மிருதுவான தளிர்க்கையில், ராஜபுத்திரனுடைய கையை எடுத்துக்கொண்டாள். திடீரென்று, உடனேயே, கையை நழுவ விட்டுவிட்டு, ராஜபுத்திரனைத் தலையெடுத்துப் பார்த்து, "குமாரா! இந்தக் கொடும் துக்கம் ஏன் உங்கள் மனத்தில்? என்னைப் பற்றி யோசிக்க வேண்டாம். தைரியமாகச் சொல்லுங்கள். வீரேந்திரசிங்கின் மகள்..." என்றாள்.

அயேஷா முடிப்பதற்குள் ராஜபுத்திரன் குறுக்கிட்டு, "அந்தப் பேச்சு எதற்கு இப்பொழுது? அந்தக் கனவு கலைந்து விட்டது" என்றான்.

அயேஷா மௌனமானாள்; ராஜபுத்திரன் மௌனமானான். இருவரும் வெகுநேரம் பேசவில்லை. அயேஷா முகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

ராஜபுத்திரன் திடுக்கிட்டுப் போனான். அவன் கையில் ஒரு சூடான கண்ணீர்த் துளி விழுந்தது; திரும்பிப் பார்த்தான்; அயேஷா அழுதுகொண்டிருந்தாள். தேஜோமயமான அவள் முகத்தில் மளமளவென்று கண்ணீர் பெருகிக் கொண்டிருந்தது.

ராஜபுத்திரன் பதற்றமடைந்து, "ஏன், ஏன், அயேஷா! ஏன் நீ அழுகிறாய்!" என்றான்.

அயேஷா ஒரு பதிலும் சொல்லாமல் ரோஜாப்பூ முழுவதையும் பாக்கியின்றிப் பிய்த்தாள். இதழ்களை உதிர்த்துக்கொண்டே, "நான் இன்று உங்களிடம் விடைகொள்ளும் மாதிரியை மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டாம். நான் அநேக துன்பங்களைப் பொறுத்துக்கொண்டிருக்க முடியும். ஆனால் நீங்கள் இங்கே சிறையில் கிடந்து, இந்தக் கிலேசத்தை அனுபவிப்பதைக் கண்டு சகிக்க முடியவில்லை. ஜகத்சிங்; நீங்கள் என்னுடன் கூட வெளியே வாருங்கள்! குதிரைலாயத்தில் குதிரை இருக்கிறது; கொடுக்கிறேன். இன்றிரவே உங்கள் சொந்தப் பாசறைக்குச் செல்லுங்கள்!" என்றாள்.

ராஜபுத்திரர்களின் இஷ்ட தேவதையான பவானியே நேரில் சரீரத்துடன் வந்து வரம் கொடுத்திருந்தாலும் ஜகத்சிங் அவ்வளவு ஆச்சரியமடைந்திருக்கமாட்டான். ஒன்றும் பதில் சொல்லாமல் இருந்தான்.

"ஜகத்சிங்! ராஜகுமாரா! புறப்படுங்கள்!" என்றாள் அயேஷா மறுபடியும்.

"அயேஷா! நீ எனக்குச் சிறையிலிருந்து விடுதலையா கொடுக்கிறாய்?" என்று ஜகத்சிங் கொஞ்ச நேரம் கழித்துக் கேட்டான்.

"ஆமாம்! இப்பொழுதே!"

"உன் பிதாவிற்குத் தெரியாமலா?"

"அதைப்பற்றிய கவலை உங்களுக்கு வேண்டாம். நீங்கள் உங்கள் கூடாரத்திற்குத் திரும்புங்கள். நான் அவருக்குச் சமாதானம் சொல்லிக் கொள்ளுகிறேன்".

"காவலாளி விடமாட்டானே!"

அயேஷா தன் கழுத்திலிருந்த ரத்னஹாரம் ஒன்றை எடுத்துக் காட்டி, "இதைக் கொடுத்தால் விடுகிறான்!" என்றாள்.

"இந்த விஷயம் வெளியில் வந்தால் உன் தகப்பனார் உன்னைக் கஷ்டத்திற்குள்ளாக்குவார்."

"அதனால் என்ன நஷ்டம்?"

"அயேஷா! நான் போகமாட்டேன்!"

அயேஷாவின் முகம் சுண்டிப்போயிற்று.

"ஏன்?" என்றாள்.

"நான் உன்மூலமாக உயிரையே அடைந்தேன். உனக்குக் கஷ்டம் ஏற்படுவதற்குக் காரணம் ஆகவேமாட்டேன்!"

"நிச்சயமாக வரமாட்டீர்களா?" என்று அயேஷா கேட்டாள்.

"நீ மட்டும் திரும்பிப்போ!"

அயேஷா மறுபடியும் மௌனமாக இருந்தாள். மறுபடியும் கண்ணீர் தாரைதாரையாக வடிந்தது. மிகவும் சிரமப்பட்ட அவள் அதை அடக்க முயன்றாள்.

அயேஷா அப்படி மௌனமாக அழுவதைக் கண்ட ஜகத்சிங் கலங்கிப் போனான்.

"அயேஷா, அயேஷா! எதற்காக அழுகிறாய்? சொல்ல மாட்டாயா?" என்று கெஞ்சினான்.

அயேஷா ஒன்றும் பேசவில்லை.

"அயேஷா! நான் சொல்வதைக் கேள்: நீ அழுவதன் காரணம் எனக்கு வெளிப்படையாகச் சொல்லக் கூடியதாயிருந்தால் சொல்! உன் அழுகையை நிறுத்துவதற்காக என் பிராணனைக் கொடுத்தாவது அந்தக் காரணத்தைப் போக்குகிறேன். நான் கைதியாயிருக்கிறேன் என்பதற்காக மட்டும் ஒருகாலும் உன் கண்களிலிருந்து ஜலம் வராது. உன்னுடைய பிதாவின் சிறைச்சாலையில் என்னைப் போல எவ்வளவோ கைதிகள் தவித்துக் கொண்டிருக்கவில்லையா?"

அயேஷா ராஜபுத்திரனுக்குப் பதில் சொல்லாமல் தன் தலைப்பை எடுத்துக் கண்களைத் துடைத்துக் கொண்டாள் வெகுநேரம் பேச்சற்று இருந்துவிட்டு, "ராஜபுத்திர! நான் இனிமேல் அழவில்லை" என்றாள்.

தன் கேள்விக்குப் பதில் வராததைக் கண்ட ராஜபுத்திரன் கொஞ்சம் மனவருத்தமடைந்தான். இருவரும் தலைகுனிந்த வண்ணம் மௌனமாக இருந்தார்கள்.

தாழ்வாரத்தில் ஓர் ஆள் நிழல் தென்பட்டது. யார் என்றுகூட அவர்களுக்குத் தெரியவில்லை. மூன்றாம் மனிதன் பக்கத்தில் வந்து நின்றதைக்கூட அவர்கள் அறியவில்லை. அங்ஙனம் வந்து சற்று நேரம் அசைவற்று நின்ற அவன் கோபத்தால் துடித்த குரலில், "நவாப் குமாரி! மிகவும் நன்றாயிருக்கிறது!" என்றான்.

இருவரும் தலையெடுத்துப் பார்த்தார்கள்: உஸ்மான்! உஸ்மான் மோதிரம் கொண்டுவந்து கொடுத்தவன் மூலம் நடந்ததையெல்லாம் அறிந்துகொண்டு அங்கே வந்தான். உஸ்மான் அயேஷாவை அவ்விடத்தில் பார்த்ததால் அவளுக்கு ஏதாவது ஆபத்து நேரிடுமோ என்று ராஜபுத்திரன் பயந்தான். உஸ்மான் காட்டிய கோபத்திலிருந்தே அவன் அவ்வாறு எண்ணினான். உஸ்மான் சொன்னதன் அர்த்தம் முழுவதையும் கிரகித்தாள் அயேஷா. ஒரு நிமிஷம் அவள் முகம் ரத்தம்போல் சிவந்தது. ஆனால் வேறு ஒருவிதமான அதைரியச் சின்னமும் அவளிடம் தென்படவில்லை. அமைதியான குரலில், "எது நன்றாயிருக்கிறது என்கிறாய் உஸ்மான்?" என்று கேட்டாள்.

உஸ்மான் முன்போலவே கோபத்துடன், "நவாபின் மகள் இரவில் தனியாக ஒரு கைதியுடன்கூட இருப்பதுதான்! அந்தச் செய்கை உத்தமமானதுதானே? கைதியைப் போல இரவில் நியமமின்றிச் சிறைச்சாலையில் நுழைவதும் நல்லதுதான் அல்லவா?"

இந்த மாதிரி உஸ்மான் உதாஸினமாகப் பேசினது அயேஷாவின் கல்மஷமற்ற தன்மைக்குப் பொறுக்க முடியாததாயிருந்தது. உஸ்மானை முறைத்துப் பார்த்துக் கொண்டு பதில் சொன்னாள். அந்த மாதிரியான கர்வம் படைத்த தொனியில் அயேஷா பேசி உஸ்மான் பார்த்ததே கிடையாது.

"இந்த நடு நிசியில் தனியாக சிறைச்சாலையில் வந்து கைதியுடன் பேசவேண்டுமென்பது என் இஷ்டம் நான் செய்வது நல்லதா அல்லது கெட்டதா என்பதில் உனக்கென்ன கவலை, என்ன பிரயோஜனம்?"

உஸ்மான் ஆச்சரியமடைந்து போனான். அதைக்காட்டிலும் அதிகமாகக் கோபம் அடைந்தான்.

"பிரயோஜனம் இருக்கிறதா இல்லையா என்பது நாளைக்குக் காலையில் நவாபின் வாய்ப்பட அறிவாய்"

"என் தகப்பனார் என்னைக் கேட்கும்போது நான் அவருக்குப் பதில் சொல்லிக் கொள்ளுகிறேன். அதற்கு நீ கவலைப்பட வேண்டாம்!"

"நானும் கேட்டால்?"

அயேஷா எழுந்து நின்றுகொண்டாள். கொஞ்சநேரம் முன்போல உஸ்மானை விறைத்துப் பார்த்தாள். அவளுடைய விசாலமான கண்கள் பின்னும் அதிகமான அகன்றன. முகபத்மம் பின்னும் அதிகமான சிவப்புடன் மலர்ந்தது. வண்டுபோலக் கறுத்த கேசத்தையுடைய தலையை ஒரு பக்கமாகச் சாய்த்துக் கொண்டிருந்தாள். மார்பு, அலைகளால் தாக்கப்பட்டு எழுந்து விழும் சைவல மலர்போலப் பதறியது. திடமான குரலில் அயேஷா பேசலானாள்: "உஸ்மான், நீ கேட்கிறாயா என்னை? சொல்லுகிறேன்! கேள்: கைதி என் பிராணநாதன்!"

அந்த நிமிஷம் அறையில் இடிவிழுந்திருந்தால் கூட ராஜபுத்திரனும் பட்டாணியனும் அவ்வளவு திடுக்கிட்டுப் போயிருக்கமாட்டார்கள். ராஜபுத்திரன் மனத்திலிருந்த இருளி;டில அப்பொழுது விளக்கு வெளிச்சம் தோன்றிற்று. அயேஷா மௌனமாக அழுதது அப்பொழுதுதான் அவனுக்கு அர்த்தமாயிற்று. உஸ்மான் இதை முன்பே கொஞ்சம் கொஞ்சம் ஊகித்தறிந்திருந்தான். அதனால்தான் அப்பொழுது அவன் அந்த மாதிரி ஜாடையாகப் பேசினது. ஆனால் அப்படி அயேஷா தன் எதிரிலேயே வாய்விட்டு அவ்வாறு சொல்லுவாள் என்று அவன் கனவிலும் நினைக்கவில்லை. உஸ்மான் பேச்சற்றுப் போனான்.

அயேஷா மறுபடியும் பேசலானாள்:

"கேள், உஸ்மான்! மறுபடியும் சொல்லுகிறேன்: இந்த கைதி என் பிராணேசுவரர்; என் ஆயுள் பரியந்தம் வேறு எந்த மனிதனும் என் ஹ்ருதயத்தில் இடம் கொள்ள முடியாது! காலையில் இவருடைய ரத்தம் கொலைக்களத்தில் பெருகினாலும், - சொல்லியவள் நடுநடுங்கினாள். அதைப் பார்த்தபிறகும், என் வாழ்நாட்கள் முடியும் வரை, இவரது திருவுருவத்தை என் இதயத்தில் இருத்தி ஆராதனை செய்வேன்! அடுத்த நிமிஷம் முதல் இவரை நான் நிரந்தரமாகப் பார்க்கமுடியாமற் போனாலும், காலையில் இவர் விடுதலையடைந்து முடிசூடி, அயேஷாவின் பெயரையே நிராகரித்துவிட்டாலும், நான் இவருடைய அன்பை வேண்டும் அடிமையாக இருப்பேன்! இன்னும் கேள்: நான் இவருடன் தனியாயிருந்தபோது சொன்னதைச் சொல்லுகிறேன். சிறை காவலனைச் சரிப்படுத்தி இவரை என் தகப்பனாருடைய குதிரை லாயத்திற்கு அழைத்துச் சென்று, அதிலிருந்து ஒரு குதிரையைக் கொடுத்துவிடுவதாகவும், இவர் தம் தகப்பனாரிடம் போய்ச் சேரலாமென்றும் சொன்னேன். ஆனால் கைதி அப்படித் தப்பியோட மாட்டேனென்று மறுத்துவிட்டார். இல்லாவிட்டால் இத்தனை நாழிகைக்கு நீ அவருடைய நக நுனியைக்கூட காணமுடியாது".

அயேஷா மறுபடியும் கண்ணீர் உதிர்த்தாள். கொஞ்ச நேரம் சும்மா இருந்துவிட்டு வேறு குரலில், "உஸ்மான், இதையெல்லாம் சொல்லி உன் மனத்தை வருத்திவிட்டேன். என்னை மன்னித்து விடு. நீ என்னிடம் பற்றுக் கொண்டிருக்கிறாய். நானும் உன்னிடம் அபிமானமுடையவள்தான். நீ இன்று அயேஷாவை நம்ப முடியாதென்று எண்ணுகிறாய். அயேஷா தான் செய்ததை வாய் விட்டுச் சொல்லக்கூடியவள். இன்று உன்னிடம் சொன்னதை நாளைக்குப் பிதாவின் முன்னிலையிலும் சொல்லுவேன்!" என்றாள்.

பிறகு ஜகத்சிங்கின் பக்கம் திரும்பி, "ராஜகுமாரா! நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். இன்று உஸ்மான் என் மனத்தைக் கிளறியிருக்காவிட்டால், இந்தப் பாழாய்போன ஸ்ருதயத்தின் ரகசியம் வெளியில் வந்தே இருக்காது; மனிதன் காதில் பட்டே இருக்காது!" என்றாள்.

ராஜபுத்திரன் அசைவற்று நின்று கொண்டிருந்தான். உள்ளே வேதனை வருத்திக் கொண்டிருந்தது.

உஸ்மான் ஒன்றும் பேசவில்லை.

அயேஷா மறுபடியும், "உஸ்மான், மறுபடியும் சொல்லுகிறேன்: நான் ஏதாவது பிசகு செய்திருந்தால், அதை மறந்துவிடு, நான் முன் போல உன்னுடைய அன்புமிக்க சகோதரி!" என்றாள்.

இப்படிச் சொல்லிவிட்டு அயேஷா வேலைக்காரி திரும்புவதை எதிர்பார்க்காமல் வெளியே போய்விட்டாள். உஸ்மான், கொஞ்ச நேரம் மெய்ம்மறந்தவனாக அங்கே நின்று விட்டுத் தன் விடுதிக்குப் போய்ச் சேர்ந்தான்

## பதினாறாம் அத்தியாயம்

## பழிக்குப் பழி

அன்றிரவு கத்லுகானின் உல்லாஸ மாளிகையில் நாட்டியக் கச்சேரி நடந்தது; ஆனால் நாட்டியமாடுகிறவர்களைத் தவிர வேறு யாரும் அங்கில்லை; பாட்டைக் கேட்பதற்கு வேறொருவரும் இல்லை. அப்பேர்ப்பட்ட பிறந்த நாள் சந்தப்பத்தில் மொகலாய அரசர்கள் சபை கூட்டித் தமாஷை அனுபவிப்பார்கள். கத்லுகான் முறை அதன்று.

கத்லுகான் தனியாகத் தன் இஷ்டப்படி நடக்கும் சிற்றின்ப சுகத்தில் பரமப் பிரியமுடையவன். அன்றிரவு உல்லாஸ கிருகத்திலிருந்த கும்பலின் நடுவேயிருந்துகொண்டு, நிருத்திய கீதங்களை அனுபவித்து ஆனந்த பரவசனாயிருந்தான். கோஜா கணங்களைத் தவிர வேறு யாரும் ஆண்பிள்ளைகள் அங்கே இருக்கக்கூடாதென்பது உத்தரவு. பெண்களிற் சிலர் ஆடினார்கள்; சிலர் பாடினார்கள்; சிலர் வாத்தியங்கள் வாசித்தார்கள்; வேறு சிலர் அவனைச் சுற்றி உட்கார்ந்திருந்தார்கள். இந்திரிய சேஷ்டைகளைப் பூராவும் கிளப்பி, மதம் ஊட்டுவதற்கு வேண்டிய சகல சாமக்கிரியைகளும் அங்கே இருந்தன. அறைக்குள் நுழையவேண்டியது தான் தாமதம்; இடைவிடாமல் தெளிக்கப்பட்ட பன்னீரால் உடம்பு தலையிலிருந்து கால் வரை வாசனையேறிக் குளிர்ச்சியடைந்துவிடும். வெள்ளி, தந்தங்களில் வேலைப்பாடு கொண்ட விளக்குகளின் வெளிச்சம் கண்களைப் பறித்தது. புஷ்பங்களுக்கோ கேட்கவேண்டியதில்லை. வாசனைகள், விளக்குகள், புஷ்பங்கள், எங்கும் நிறைந்திருந்தன. புஷ்பங்களின் அழகு, பன்னீரின் மணம், ஜோதி விளக்குகளின் பிரகாசம், இவைகள் படிந்து, பொலிவு கொண்ட, பெண்களின் அங்க சௌந்தரியம், எல்லாம் ஒரே அழகின் நிறைவாக இருந்தன. விளக்குச் சுடர், நகைகளின் நவரத்தினச்சுடர், இவைகளுக்கும் மேற்போன பெண்களின் பார்வைச்சுடர் – எல்லாம் ஒரே துளி வெள்ளம். வீணையின் நாதமும் நாட்டியப் பெண்களின் குரல் நாதமும் கலந்தும் பிரிந்தும் கிளம்பின.

ஒரு பெண், பத்ம வனத்தில் பெண் ஹம்ஸம்போல, அந்த அழகின் நடுவே நடனம் செய்து கொண்டிருந்தாள்; நீலப் புடைவை உடுத்திருந்தாள். அதில் தங்கத்தால் நக்ஷத்திரங்கள் பதிக்கப்பட்டிருந்தன. சிரித்துக்கொண்டே அவள் பேசுகிறாள்.

அவள் யார்? கத்லுகானுக்குப் பக்கத்தில் இருந்து கொண்டு, தங்கக் கிண்ணத்தில் மதுவை ஏந்திக் கொண்டிருக்கிறாள். எல்லோரையும் விட்டுக் கத்லுகானின் பார்வை அவள் மேல்தான் விழுகிறது. அவள் தன் கடைக்கண்ணால் கத்லுகானின் ஸ்ருதயத்தைப் பிளக்கிறாள். அவள் விமலா!

விமலா மதுக்கிண்ணத்தைக் கத்லுகானிடம் கொடுக்கிறாள். என்ன பாட்டு! என்ன சாரீரம்! மனித ஸ்திரீயின் பாட்டல்ல; அப்ஸரஸின் பாட்டு. மற்றப் பாடகிகளுடன் சேர்ந்து பாடுகிறாள்; எழுந்து நாட்டியமாடுகிறாள். என்ன அழகு! என்ன குரல்! என்ன பாட்டு!

கத்லுகானின் உடலில காமாக்னி ஜுவாலை விட்டு எரிய ஆரம்பித்தது.

"பியாரி!" என்று பல தடவை சொன்னான்.

கத்லுகான் மதியிழந்தான்; உன்மத்தனானான். விமலாவைக் கூப்பிட்டு, "நீ எங்கே இருக்கிறாய்?" என்றான்.

அடிமை இந்தப் பாதங்களில்தான் என்று சொல்லிக் கொண்டு விமலா கத்லுகானின் தோளின்மேல் ஒருகை போட்டாள் – மற்றொரு கையில் கத்தி மின்னிற்று!

அந்த நிமிஷம் ஒரு பயங்கரமான கூச்சல் போட்டுக் கொண்டு, கத்லுகான் விமலாவைத் தூர எறிந்தான். அவளைத் தள்ளிவிட்டுத் தானும் பூமியில் சாய்ந்தான். விமலா அவன் மார்பில் கத்தியைப் பிடிவரையில் செலுத்திவிட்டாள்.

"பிசாசே! சைதானே!" என்று கத்லுகான் கத்தினான்.

"பிசாசு இல்லை! சைதானுமில்லை! வீரேந்திரசிங்கின் விதவை மனைவி!" என்று விமலா கத்லுகானின் காதில் சிறீனாள்.

பிறகு விமலா அறையை விட்டு வெளியே ஓடினாள். கத்லுகான் கதறினான்; விமலாவும் கத்திக்கொண்டே ஓடினாள்.

வழியிலிருந்த சிலர், "என்ன?" என்று கேட்டார்கள்.

"மோசம் வந்துவிட்டது; சீக்கிரம் வாருங்கள்; உள்ளே மொகலாயர்கள் வந்துவிட்டார்கள்; நவாபைக் குத்திவிட்டார்கள். தெரியுமா?" என்றாள் விமலா.

அவ்வளவுதான்! எல்லோரும் ஓட ஆரம்பித்தார்கள்.

வாசற் காப்போன் தூங்கிக் கொண்டிருந்தான். விமலா வெளியே போனாள்.

கொஞ்ச தூரம் சென்றதும் ஒரு மரத்தடியில் ஒரு மனிதர் தனியாக நிற்பதை விமலா கண்டாள் பார்த்தவுடனேயே அவர் அபிராமஸ்வாமியென்று அறிந்துகொண்டாள் அருகே சென்றாள்.

"நான் மிகவும் பயந்து போனேன். கோட்டையில் என்ன அமர்க்களம்?" என்றார் அவர்.

"நான் என் கைம்பெண் நிலைக்குப் பழிதீர்த்துக்கொண்டு வந்துவிட்டேன். வாருங்கள் போவோம்; எல்லாம் பிறகு பேசுவோம். திலோத்தமை வந்துவிட்டாளா?"

"திலோத்தமை ஆஸ்மானியுடன் இப்பொழுதுதான் முன்னால் போகிறாள்; சீக்கிரம் சந்திப்போம்".

இருவரும் வேகமாகச் சென்றார்கள்.

குடிசைக்குப் போய்ப் பார்த்தபொழுது, சற்று முன்பு தான் ஆஸ்மானியுடன் திலோத்தமை அங்கு வந்திருந்தாள். திலோத்தமை அபிராமஸ்வாமியின் காலில் விழுந்து அழ ஆரம்பித்தாள்.

அபிராமஸ்வாமி அவளைச் சமாதானப்படுத்தி, "ஈசுவரக் கிருபையால் நீ அந்தத் துராத்மாவின் கையிலிருந்து தப்பி வந்து விட்டாய். இனிமேல் நாம் இங்கே இருக்கக்கூடாது. கத்லுகானின் மரணத்திற்குப் பழி வாங்கப் பட்டாணியர்கள் நம்மைத் தேடுவார்கள். இன்றிரவே நாம் இங்கிருந்து வெளியேறி விடவேண்டும்" என்றார்.

எல்லோரும் அப்படியே செய்ய நிச்சயித்தார்கள்.

## பதினேழாம் அத்தியாயம்

## அந்திய காலம்

விமலா ஓட்டமெடுத்த சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரு சேகவன் வெகுவேகமாக ஜகத்சிங்கிடம் ஓடிவந்து, "யுவராஜ நவாப் ஸாஹப் சாகும் தறுவாயில் இருக்கிறார். அவர் உங்களைப் பார்க்க வேண்டுமாம்" என்றான்.

ராஜகுமாரன் ஆச்சரிய மடைந்தவனாய், "அதெப்படி?" என்று கேட்டான்.

"நவாப் வீட்டில் சத்துரு புகுந்து நவாப் ஸாஹபைக் குத்திவிட்டு ஓடிவிட்டான். இன்னும் உயிர் போகவில்லை. ஆனால் தாமதம் கூடாது, நீங்கள் சட்டென்று போகவேண்டும்; இல்லாவிட்டால் பார்க்கமுடியாது".

"இந்தச் சமயத்தில் அவன் என்னைப் பார்ப்பதில் என்ன பிரயோஜனம்?"

"யார் கண்டார்கள்? நான் வெறும் உத்தரவைக் கொண்டு வந்தவன்".

ராஜகுமாரன் தூதனுடன் அந்தப்புரத்திற்குள் சென்றான். கத்லுகானின் உயிர் விளக்குக் கொஞ்சம் கொஞ்சமாக அணைந்து கொண்டிருந்தது. நாலுபக்கங்களிலும் உஸ்மான், அயேஷா, புத்திரர்கள், பத்தினிகள், தாசிகள், எல்லோரும் சுற்றிக் கொண்டிருந்தார்கள். அழுகை சத்தம் பலமாக இருந்தது. குழந்தைகள் என்னவென்று தெரியாமல் ஓலமிட்டன. அயேஷா மட்டும் சத்தம் போடவில்லை. அவளுடைய கண்களிலிருந்து நீர்த்தாரை பெருகிக் கொண்டிருந்தது. மௌனமாகத் தகப்பனாரின் தலையைத் தன் மடியில் வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

ராஜகுமாரன் உள்ளே நுழைந்ததும், குவாஜா ஈஸா என்ற மந்திரி அவன் கையைப் பிடித்துக் கத்லுகானுக்கு அருகே கூட்டிக் கொண்டு போனான்; செவிடனிடம் பேசுவதுபோல உரத்த குரலில், "யுவராஜா ஜகத்சிங் வந்திருக்கிறார்!" என்றான்.

கத்லுகான் மெலிந்த குரலில், "நான் சத்துரு சாகப் போகிறேன்; கோபம் வெறுப்பு இப்பொழுது வேண்டாம்" என்றான்.

"இந்தச் சமயம் விட்டுவிடுகிறேன்" என்றான் ஜகத்சிங்.

கத்லுகான் மறுபடியும் அதே குரலில், "ஒன்று கேட்டுக் கொள்ளுகிறேன், ஏற்றுக்கொள்!" என்றான்.

"எதை ஏற்றுக்கொள்ளவேண்டும்?"

குழந்தைகள் - எல்லாம் - யுத்தம் - பெருத்த - தாகம்! என்ற கத்லுகான் மறுபடியும் பேச ஆரம்பித்தான்.

அயேஷா அவனுடைய வாயில் கொஞ்சம் ஷர்பத் ஊற்றினாள்.

"யுத்தம் வேலை - வேண்டாம் - சமரஸம்".

கத்லுகான் மௌனமானான். ஜகத்சிங் ஒரு பதிலும் சொல்லவில்லை. அவன் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான் கத்லுகான். பதில் வராதது கண்டு கிலேசத்துடன், "இஷ்டமில்லையா?" என்றான்.

"பட்டாணியர் டில்லி பாதுஷாவை யஜமானனாக ஒப்புக் கொண்டால், நான் சமரஸம் பேசத் தயாராக இருக்கிறேன்" என்று ஜகத்சிங் சொன்னான்.

"ஒரிஸா?"

"காரியம் முடிந்ததால் உங்கள் சந்ததிகள் ஒரிஸாவை இழக்க வேண்டியதில்லை!"

கத்லுகானின் மரணாவஸ்தை நிரம்பிய முகம் கொஞ்சம் பிரகாசம் கொண்டது.

"நான் - விடுதலை - கடவுள் - நல்லது".

ராஜபுத்திரன் திரும்பிப் போகப் பிரயத்தனப்பட்டான். அயேஷா குனிந்து தகப்பனிடம் ஏதோ சொன்னாள். கத்லுகான் குவாஜா ஈஸாவைப் பார்த்து ஜகத்சிங்கை இருக்கும்படி சொல்லி ஜாடை செய்தான். குவாஜா ஈஸா ராஜபுத்திரனைப் பார்த்து, "இன்னும் ஏதோ பேசவேண்டும் போலிருக்கிறது" என்றான்.

ராஜபுத்திரன் திரும்பி வந்தான். கத்லுகான், "காதின்கிட்டே!" என்றான்.

ராஜபுத்திரன் அருகே சென்று கத்லுகானின் முகத்திற்கருகே காதை வைத்துக் கொண்டான். கத்லுகான் முன்னைக்காட்டிலும் ஹீனமான குரலில், "வீர" என்றான்.

ஒரு நிமிஷம் சும்மா இருந்துவிட்டு மறுபடியும் "வீரேந்திரசிங் - தாகம் தாகம்!" என்றான்.

அயேஷா மறுபடியும் உதடுகளில் ஷர்பத் ஊற்றினாள்.

"வீரேந்திரனின் பெண்"

ராஜபுத்திரனுக்குத் தேள் கொட்டியது போலிருந்தது.

"தந்தையை யிழந்தவள் - நான் மகாபாபி - உச். - தாகம்".

அயேஷா அடிக்கடி மதுவை உதட்டில் தடவினாள். ஆனால் கத்லுகானுக்குப் பேசுவது கஷ்டமாகிவிட்டது.

"கொடிய ஜுவாலை - புனிதை - நீ பார்த்துக்கொள்!"

ராஜபுத்திரன் "என்ன?" என்றான்.

இது கத்லுகானின் காதில் மேக கர்ஜனைபோல் விழுந்தது.

"அந்தப் பெண்ணைப்போல் - சுத்தமானவள் கிடையாது - நீ உச்! - தாகம் - போகிறேன், அயேஷா!"

அவ்வளவுதான்; கத்லுகானின் உயிரற்ற தலை ஒரு பக்கம் சாய்ந்தது.

## பதினெட்டாம் அத்தியாயம்

## உஸ்மானின் காதல்

ஜகத்சிங் விடுதலையடைந்து தன் தகப்பனாரிடம் போய்ச் சேர்ந்ததும், ஒப்புக்கொண்டபடி, மொகலாயருக்கும் பட்டாணியருக்கும் சமரஸம் ஏற்படுத்த முயற்சி செய்தான். பட்டாணியர் டில்லி பாதுஷாவின் ஆதிபத்தியத்தை ஒப்புக் கொண்டு உத்கலத்திலேயே இருக்கவேண்டியது; சமரஸத்தைப் பற்றிய விஸ்தாரம் சரித்திரத்திற்குரியது. இங்கே அதிகம் விஸ்தரிப்பது வீண். உடன்படிக்கை ஏற்பட்ட பிறகு, இரு கட்சியினரும் கொஞ்சநாள் இருந்த இடத்திலேயே இருந்தார்கள். சமாதானமான பிறகு அன்பு ஏற்படும் பொருட்டு, கத்லுகானின் வாரிசுகளுடன் மந்திரி குவாஜா ஈஸாவும் சேனாதிபதி உஸ்மானும் ராஜா மான்சிங்கின் கூடாரத்திற்குச் சென்றார்கள் ஐம்பது யானைகளையும் மற்ற விலையுயர்ந்த சாமான்களையும் கொடுத்துப் பேட்டிகண்டு மகாராஜாவைத் திருப்தி செய்தார்கள். ராஜாவும் அவர்களுக்கு அநேக சன்மான்கள் அளித்தார்.

ராஜபுத்திர சைனியம் ஊருக்குப் புறப்படும்பொழுது ஜகத்சிங், உஸ்மான் முதலியவர்களிடம் விடைபெற்றுக் கொள்ளக் கோட்டைக்கு வந்தான். சிறைச்சாலையில் நடந்த சம்பவத்திற்குப் பிறகே, உஸ்மானுக்கு ஜகத்சிங்கிடம் அவ்வளவு பற்றுதல் இல்லை. சாதாரணமாகப் பேசி விடைகொடுத்தான்.

ஜகத்சிங் உஸ்மானிடம் விடைபெற்றுக்கொண்டு குவாஜா ஈஸாவிடம் சொல்லிக் கொள்ளப் போனான். அயேஷாவிடம் விடைபெற்றுக்கொள்ள உத்தேசித்து அவளிருக்கும் இடத்திற்குப் போனான்; ஓர் அந்தப்புரத்துப் பெண் மூலமாக, "நவாப் ஸாஹபின் மரணத்திற்குப் பிறகு பார்க்கவில்லையென்றும், நான் இப்பொழுது பாட்னாவிற்குப் போவதால் மறுபடியும் சந்திப்பது அரிதாகுமென்றும், மரியாதை செலுத்துவிட்டுப் போக இச்சைப்படுகிறேன் என்றும் சொல்" என்று சொல்லியனுப்பினான்.

அவள் சிறிதுநேரம் கழித்துத் திரும்பி வந்து, "தான் யுவராஜாவைச் சந்திக்கக்கூடாது என்று நவாப் குமாரி சொல்லுகிறாள்; மன்னிப்பும் கோருகிறாள்" என்றாள்.

ராஜபுத்திரன் வருத்தத்துடன் தன் கூடாரத்திற்குப் போகத் திரும்பினான். வழியில் உஸ்மானைக் கண்டான்.

ராஜபுத்திரன் மறுபடியும் அவனுக்கு நமஸ்காரம் செய்துவிட்டு மேலே சென்றான்; உஸ்மான் அவனைப் பின் தொடர்ந்தான்.

"சேனாதிபதி! என்னால் உங்களுக்கு ஏதாவது ஆக வேண்டியிருந்தால் உத்தரவாகட்டும் உடனே செய்து முடிக்கிறேன்" என்று ராஜகுமாரன் சொன்னான்.

"உங்களிடம் எனக்கு ஒரு விசேஷமான காரியம் இருக்கிறது. நாம் தனியாகப் பேசவேண்டியது. என்னுடன் கொஞ்சம் தனியாக வரமுடியுமா?"

இருவரும் ஒரு தனி இடத்தை அடைந்தார்கள். அது ஒரு நெருக்கமான ஆலங்காடு. அதன் நடுவில் ஒரு பாழடைந்த மாளிகை இருந்தது. அதில் யாருமில்லை. அதன் ஒரு பாகத்தில் ஒரு முகம்மதிய சமாதி கட்டப்பட்டிருந்தது. மற்றொரு பக்கத்தில் சிதை ஏற்படுத்தப்பட்டிருந்தது.

"இதெல்லாம் என்ன?" என்று உஸ்மானைப் பார்த்து ராஜகுமாரன் கேட்டான்.

"இதெல்லாம் என் உத்தரவுப்படி தயார் செய்யப்பட்டவை. இன்று நான் செத்தால் நீங்கள் மரணமடைய நேர்ந்தால் நான் இந்தச் சிதையில் உங்களுக்குப் பிராம்மணர்களைக் கொண்டு ஈமக்கிரியை நடத்துகிறேன்".

"இதெற்கெல்லாம் என்ன அர்த்தம்?"

"நான் பட்டாணியன், என் மனம் கொதித்துக் கொண்டிருக்கிறது. சரி தப்பு என்பதைப்பற்றி நான் யோசிக்கவில்லை. இந்தப் பூமியில் அயேஷாவின் காதலை விரும்புபவர்கள் இருவர் இருக்கிறார்கள் இருவருக்கு இடமில்லை. ஒருவர் இந்த இடத்தில் இன்று பிராணனை இழக்கவேண்டும்."

இப்படிச் சொல்லிக்கொண்டே ராஜபுத்திரனுக்கு அவகாசம் கொடுக்காமல் உஸ்மான் உருவிய கத்தியுடன் திடீரென்று அவன்மீது பாய்ந்தான். தன்னைக் காத்துக்கொள்ளும் பொருட்டு ராஜகுமாரனும் வாளுருவ வேண்டியதாயிற்று. ராஜபுத்திரனைக் கொன்றுவிட வேண்டுமென்று உஸ்மான் என்னென்னவோ செய்தான். ஜகத்சிங் உஸ்மானைத் தாக்காமல் தன்னை மட்டும் பாதுகாத்துக்கொண்டே வந்தான். இருவரும் கைதேர்ந்த வீரர்களாதலால் வெகு நேரம் இருவரும் சளைக்கவில்லை. ஆனால் ஜகத்சிங்கின் உடம்பில் காயங்கள் பட்டன. அப்பொழுதும் ஜகத்சிங் உஸ்மானைத் திருப்பி அடிக்கவில்லை.

கடைசியாக, "உஸ்மான்! எதற்காக இது! நான் தோற்றதாக ஒப்புக்கொள்கிறேன். வேண்டாம்!" என்றான் ராஜகுமாரன், வீணாக உயிர் விடுவதில் என்ன உபயோகமென்று.

உஸ்மான் உரக்கச் சிரித்துக்கொண்டு, "ராஜபுத்திர சேனாதிபதி சாவிற்குப் பயப்படுவதை இப்பொழுதுதான் பார்க்கிறேன். யுத்தம் செய். உன்னைக் கொன்று விடுகிறேன். நீ உயிருடன் இருந்தால் நான் அயேஷாவை அடையமுடியாது!" வெறி பிடித்தவன் போலக் கத்தினான்.

"நான் அயேஷாவை விரும்பவில்லையே!"

"நீ விரும்பவில்லை. ஆனால் அவள் உன்னை விரும்புகிறாள். யுத்தம் செய். என் மனத்தில் இப்பொழுது தயவு கிடையாது!"

ராஜபுத்திரன் கத்தியைத் தூர எறிந்துவிட்டு, "நான் யுத்தம் செய்யப் போவதில்லை. நீங்கள் எனக்க மிகவும் உபகாரம் செய்திருக்கிறீர்கள். நான் உங்களுடன் சண்டை செய்ய மாட்டேன்" என்றான்.

உஸ்மான் கோபத்துடன் ராஜபுத்திரனைக் காலால் உதைத்தான்.

ராஜகுமாரன் அதற்குமேல் சும்மா இருக்க முடியிவில்லை. நரியால் கடிக்கப்பட்ட சிங்கம்போலத் தாவிப் பாய்ந்தான். உஸ்மானை வயிற்றில் ஓங்கி ஒரு குத்து குத்தினான். அவன் அடியின்கீழ் உஸ்மான் விழுந்தான். ராஜபுத்திரன் அவனுடைய மார்பில் ஏறி உட்கார்ந்து கொண்டான்.

"உன்னை நான் இப்பொழுது கொன்றுவிட முடியும் அல்லவா?"

"கொன்றுவிடு. இல்லாவிட்டால் என்றாவது உன்னைக் கொல்லப் பார்க்கும் ஒருவன் உயிரோடிருந்து கொண்டே இருப்பான்" என்றான் உஸ்மான்.

"இருக்கட்டுமே! அதற்கு ராஜபுத்திரர்கள் பயப்படுவதில்லை. ஆனால் நீ என் உயிரைக் காப்பாற்றினாய். ஆகையால் இப்பொழுது உன்னைக் கொல்லாமல் விடுகிறேன். எழுந்து வீடுபோய்ச் சேர். ராஜபுத்திரனை நீ காலால் உதைத்தாய். நன்றியென்ற கட்டுப்பாடில்லா விட்டால் ராஜபுத்திரன் எப்படி உனக்குப் பதில் செய்வான் என்பது தெரிந்திருக்கும்".

உஸ்மான் விடுபட்டு மௌனமாக எழுந்து குதிரையேறி கோட்டையை நோக்கிப் போய்விட்டான்.

ராஜகுமாரன் குதிரையை அவிழ்ப்பதற்காகப் போனான். குதிரையின் சேணத்தில் கொடிக் கயிற்றால் ஒரு கடிதம் கட்டப்பட்டிருந்தது. அதை ஜகத்சிங் கையிலெடுத்துப் பார்த்தான். அது மனிதக் கூந்தலால் கட்டப்பட்டிருந்தது. அதன் மேல், இந்தக் கடிதத்தை இரண்டு நாட்களுக்குள் உடைக்கக் கூடாது என்று எழுதியிருந்தது.

ராஜகுமாரன் எழுதினவர்களின் அபிப்பிராயம் என்னவாயிருக்குமென்று சற்று நேரம் யோசித்தான். பிறகு கடிதத்தைக் கவசத்தில் வைத்துக்கொண்டு குதிரை மீதேறிக் கூடாரத்தை நோக்கிப் புறப்பட்டான்.

ராஜகுமாரன் கூடாரத்திற்கு வந்த மறுதினம் மற்றொரு கடிதம் வந்தது அதை அயேஷா அனுப்பியிருந்தாள். அதன் விருத்தாந்தத்தை அடுத்த அத்தியாயத்தில் தான் பார்க்கவேண்டும்.

## பத்தொன்பதாம் அத்தியாயம்

## அயேஷாவின் கடிதம்

அயேஷா எழுதுகோலை எடுத்துக்கொண்டு கடிதம் எழுத ஆரம்பித்தாள். 'ஆருயிர்த்தலைவா!] என்று முதலில் எழுதினாள். பிறகு அதை அடித்துவிட்டு ராஜகுமாரா! என்று எழுதினாள். அப்படி அடித்து எழுதும் பொழுது அயேஷாவின் கண்ணீர் காகிதத்தில் விழுந்துவிட்டது. ஆகையால் அயேஷா அதைத் தூரக் கசக்கி எறிந்துவிட்டு, மற்றொரு காகிதத்தை எடுத்துக்கொண்டுவந்து எழுத ஆரம்பித்தாள். சிலவரிகள் எழுதி முடிப்பதற்குள் அந்தக் காகிதமும் கண்ணீர் விழுந்து கெட்டுப்போயிற்று. அதையும் கிழித்தெறிந்தாள். ஒருவழியாகச் சுத்தமான கடிதம் ஒன்றை எழுதி முடித்தாள்; பிறகு ஒருதரம் வாசித்துப்பார்த்தாள். படிக்கும்பொழுது கண்ணீர் கண்களை மங்கச் செய்தது. ஒருவிதமாக எப்படியோ கடிதத்தை ஒட்டித் தூதன் கையில் கொடுத்தனுப்பினாள். கடிதத்துடன் தூதன் ராஜபுத்திரனுடைய கூடாரத்தை நோக்கிப் புறப்பட்டான். அயேஷா தனியாகக் கட்டிலில் படுத்துக்கொண்டு அழ ஆரம்பித்தாள்.

ஜகத்சிங் கடிதத்தைப் பெற்று அதைப் படிக்கலானான்:-

"ராஜபுத்திரா!

நான் உங்களை நேரில் சந்திக்க மறுத்ததன் காரணம் நான் என் மனோதிடத்தில் நம்பிக்கை கொள்ளவில்லையென்பதன்று. அயேஷா தைரியமற்றவள் என்று எண்ணவேண்டாம். அப்படி எண்ணினால் எனக்கு வருத்தமாக இருக்கும். உஸ்மான் தன் மனத்தில் தீயை வளர்த்துக் கொண்டிருக்கிறான். நான் உங்களை நேரில் சந்தித்தால் அவன் மிகவும் கிலேசமடைவான் என்றே நான் உங்களை நேரில் காண்பதை மறுத்தேன் சந்திப்பால் ஏற்படும் கிலேசமும் வேண்டாம். என்னுடைய சுகதுக்கங்களைக் கடவுள் கையில் ஒப்படைத்துவிட்டேன். உங்களை நேரிலேகண்டு விடைகொள்வதனால் உண்டாகும் துக்கத்தை நான் சிரமமின்றித் தாங்குவேன்

அப்படியானால் இந்தக் கடிதம் எதற்காக? என்று கேட்கலாம். ஒரே ஒரு பிரார்த்தனை-வேண்டுகோள்: அதற்காகத்தான் எழுதுகிறேன். நான் உங்களைக் காதலிக்கிறேன் என்று நான் சொன்னதை மறந்து விடவேண்டும் இந்தத் தேகம் இருக்கும்வரையில் அதை யாரிடமும் வெளியிடுவதில்லையென்று சங்கற்பம் செய்திருந்தேன் கடவுளின் விதிப்படி வெளியாகிவிட்டது. அதை மறந்துவிடுங்கள்.

நான் உங்கள் காதலை எதிர்பார்க்கவில்லை! என்னிடம் கொடுக்கக்கூடியதாக இருந்ததை எல்லாம் கொடுத்துவிட்டேன். நான் உங்களிடம் பதில் கேட்கவில்லை. என் காதல் அவ்வளவு வேர் ஓடியது. நீங்கள் என்னைக் காதலிக்காவிட்டாலும் நான் பரம சுகம் பெறுவேன். ஆனால் அதைப்பற்றிச் சொல்வதில் என்ன பயன்?

உங்களைக் கஷ்டகாலத்தில் கண்டேன். நீங்கள் எங்காவது சுகமாக இருந்தால், அயேஷாவை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, சொல்லியனுப்புங்கள். இஷ்டமில்லாவிட்டால் சொல்லியனுப்ப வேண்டாம். எப்பொழுதாவது உள்ளக் கலக்கம் ஏற்பட்டால்அயேஷாவை நினைத்துக்கொள்ளுங்கள். செய்வீர்களா?

நான் உங்களுக்குக் கடிதம் எழுதினால் - இனிமேல் எழுதினால் உலகம் நிந்திக்கும். நான் குற்றமற்றவள்- ஆகையால் அப்பேர்ப்பட்ட அபவாதத்திற்கும் நான் கவலைப்படவில்லை. எப்பொழுது தோன்றுகிறதோ அப்பொழுது எழுதுங்கள். நீங்கள் போகிறீர்கள்; இந்தப் பிரதேசத்தை விட்டுப் போகிறீர்கள். இந்தப் பட்டாணியர் சும்மா இருக்கமாட்டார்கள். மறுபடியும் நீங்கள் இங்கே வரவேண்டிய அவசியம் ஏற்படலாம் ஆனால் என்னுடன் சந்திப்பு ஏற்படாது. அடிக்கடி மனத்தில் யோசனை செய்துசெய்து இதைத்தான் ஸ்திரப்படுத்தி வைத்துக்கொண்டிருக்கிறேன் பெண் இருதயம் இம்மாதிரி கட்டுக்கடங்காதது. அதிகமான சாகஸம் அனுசிதம்.

இன்னும் ஒரே தடவை உங்களைப் பார்க்கவேண்டுமென்ற ஆசையுண்டு. நீங்கள் இந்தப் பிரதேசத்தில் கலியாணம் செய்து கொண்டால் எனக்குத் தெரிவியுங்கள். நான் விவாகத்தின்பொழுது வந்திருந்து பார்க்கிறேன். உங்கள் மனைவிக்குச் சாமானியமான அலங்காரம் ஒன்று தயார் செய்து வைத்திருக்கிறேன். சமயம் வாய்த்தால் நானே என்கைப்பட அலங்காரம் செய்கிறேன்.

இன்னும் ஒன்று அயேஷாவின் மரணச் செய்தி காதில் விழுந்தால், நீங்கள் ஒரு தடவை இங்கே வந்து, உங்களுக்காகக் காத்திருக்கும் ஒருத்தியிடமிருந்து உங்களிடம் நான் தெரிவிக்க எண்ணிய செய்தியைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

இன்னும் என்ன எழுதட்டும்? என்னென்னவோ எழுதவேண்டுமென்று ஆசை இருக்கிறது. ஆனால் என்ன பிரயோஜனம்? கடவுள் உங்களுக்குச் சுகம் அருள்க. அயேஷாவின் கதையை மனத்தில் வைத்துக்கொண்டு புழுங்கவேண்டாம்".

ஜகத்சிங் கடிதத்தைப் படித்துவிட்டு வெகுநேரம் கடிதமும் கையுமாக அங்கும் இங்கும் நடந்தான். பிறகு திடீரென்று ஒரு காகிதத்தை எடுத்துக் கீழ்க்கண்ட வரிகளை எழுதித் தூதன் வசம் கொடுத்தனுப்பினான்.

"அயேஷா!

நீ ரமணீ ரத்னம். உலகத்தில் மனம் கலங்குவதேதான் கடவுளின் இச்சைபோலும்! உனக்கு நான் ஒருவிதமான பதிலும் எழுத முடியவில்லை. உன் கடிதத்தால் நான் மிகவும் மனக்கிளர்ச்சி கொண்டுவிட்டேன். உன் கடிதத்திற்கு ஏற்ற பதிலை நான் இப்பொழுது எழுத முடியாதவனாக இருக்கிறேன். என்னை மறந்துவிடாதே, அயேஷா! ஒரு வருஷத்திற்கு அப்புறம் உன் கடிதத்திற்குப் பதில் எழுதுகிறேன்".

## இருபதாம் அத்தியாயம்

## அணையும் விளக்கு

திலோத்தமை ஆஸ்மானியுடன் அயேஷாவிடமிருந்து போன பிறகு அவளைப்பற்றிய தகவல் ஒன்றும் இல்லை திலோத்தமை, விமலா, ஆஸ்மானி, அபிராமஸ்வாமி நான்குபேரும் எங்கோ ஏதோவோர் உத்தேசத்துடன் போய்விட்டார்கள். மொகலாயருக்கும் பட்டாணி யருக்கும் சமாதானம் ஏற்பட்டவுடன், வீரேந்திர சிங்கிற்கும் அவரை அண்டினவர்களுக்கும் ஏற்பட்ட கஷ்டங்களை உத்தேசித்து இருகட்சியினரும் ஒப்பி, வீரேந்திர சிங்கின் பெண்ணைத் தேடிப்பிடித்து, அவளை மாந்தாரணக் கோட்டையில் மறுபடியும் ஸ்தாபித்து விடுவதெனத் தீர்மானித்தார்கள். அதனால்தான் உஸ்மான், குவாஜா ஈஸா, மான்சிங் முதலியவர்கள் திலோத்தமை முதலியவர்களை எங்கெங்கோ தேடினார்கள். ஆஸ்மானியுடன் திலோத்தமை அயேஷாவின் அறையிலிருந்து போனாள் என்பதற்கு மேல் ஒரு தகவலும் தெரியவில்லை. கடைசியாக மான்சிங் தேடுவது, உபயோகமில்லையென்று எண்ணி நம்பிக்கையான ஓர் ஆளை மாந்தாரணத்தில் வைத்து "நீ இங்கே இருந்துகொண்டு மாந்தாரணக் கோட்டையின் ஜாகிர்தாருடைய பெண்ணைப்பற்றி புலன் விசாரித்துத் தேட வேண்டும். கண்டுபிடித்தால் அவளைக் கோட்டையில் ஜாகிர்தாரிணியாகச் செய்யவேண்டும்" என்று உத்தரவிட்டார். இந்த மாதிரி ஏற்பாடு செய்துவிட்டு மான்சிங் பாட்னாவிற்குப் புறப்படத் தயாரானார்.

சாகிறபொழுது கத்லுகான் சொன்னதைக் கேட்டது முதல், ஜகத்சிங் மனத்தில் ஏதோ கலக்கம் இருந்துகொண்டே இருந்தது. அதன் காரணம் இன்னதென்று அவனால் ஆராய்ந்து பார்க்க முடியவில்லை.

மான்சிங்கின் படை பாட்னாவிற்குத் திரும்புவதற்கு முதல்நாள், குதிரைச் சேணம் ஒன்றில் காணப்பட்ட கடிதம் ஒன்று ராஜகுமாரனின் கைக்கு வந்தது. ராஜகுமாரன் ஆவலுடன் அதைப் பிரித்துப் படித்துப் பார்த்தான். அதில் இதுதான் எழுதப்பட்டிருந்தது:

"யாருக்காவது தர்மத்தில் நம்பிக்கையிருந்தால் – யாருக்காவது பிராம்மண சாபத்தில் பயமிருந்தால் – இதைப் படித்தவுடனேயே தனியாக இவ்விடத்திற்கு வரவேண்டும்."

- நான் பிராம்மணன்.

ராஜகுமாரன் கடிதத்தின் வாசகத்தைக் கண்டு ஆச்சரியம் அடைந்தான். இது ஒருவேளை சத்துருவின் சதியாலோசனையோ? தனியாகப் போவது யுத்தமா என்று ஒரு தரம் எண்ணினான். பிராம்மண சாபத்தைத் தவிர வேறு எதிலும் ராஜபுத்திரனுக்கு அவ்வளவு பயம் இல்லை. கடைசியாகக் கடிதத்தில் கண்டபடியே செய்வதெனத் தீர்மானித்தான். தன்னுடைய சிறுபடையைத் தனக்கு முன்னால் போகும்படியாகவும், தனக்காகக் காத்திருக்க வேண்டாமென்றும், ராஜ மாளிகையை அடையுமுன் தான் வந்து சேர்ந்து கொள்வதாகவும் அனுப்பிவிட்டு, ஜகத்சிங் தனியாக ஆலங்காட்டை நோக்கிப் புறப்பட்டான்.

முன்னாலேயே சொல்லப்பட்ட பாழடைந்த மாளிகையின் வாசலில் வந்ததும், முன்போல ஜகத்சிங் குதிரையை ஓர் ஆலமரத்தில் கட்டினான்; சுற்றுமுற்றும் பார்த்தான்; யாரும் தென்படவில்லை; பிறகு மாளிகைக்குள் பிரவேசித்தான். தாழ்வாரத்தின் ஒரு பக்கத்தில் முன்போலவே சமாதியும் சிதையும் தயாரிக்கப்பட்டு இருந்தன. சிதையின் மேல் ஒரு பிராம்மணர் குப்புறப்படுத்து அழுது கொண்டிருந்தார்.

"ஐயா, தாங்கள்தானா என்னை இங்கே தனியாக வரும்படி உத்தரவு செய்தது?" என்று ராஜகுமாரன் அவரைக் கேட்டான்.

பிராம்மணர் முகத்தைத் தூக்கிப் பார்த்தார். உடனே அவர் அபிராமஸ்வாமி என்று அறிந்தான்.

ராஜகுமாரன் மனத்தில் ஒரே அடியாக ஆச்சரியம், ஆவல், சந்தோஷம் எல்லாம் எழுந்தன. அபிராமஸ்வாமிக்கு நமஸ்காரம் செய்துவிட்டு, "நான் என்ன செய்யவேண்டும்; சொல்லுங்கள். நீங்கள் இப்படி இருப்பதற்குக் காரணம் என்ன?" என்றான்.

"இனிமேல் இதுதான் எனக்கு" என்று சொல்லி அபிராமஸ்வாமி கண்களைத் துடைத்துக் கொண்டார்.

ராஜபுத்திரன் அபிராமஸ்வாமியின் பதிலைக் கேட்டதும், மேலும் கேள்விமேல் கேள்வியாகக் கேட்க ஆரம்பித்தான்.

"என் நினைவு உங்களுக்கு எப்படி ஏற்பட்டது? எதற்காக விசாரப்படுகிறீர்கள்?"

"எதற்காக நான் அழுகிறேனோ அதற்காகத்தான் நான் உன்னை இங்கே வரச் சொன்னேன்: திலோத்தமையின் மரணகாலம் சமீபித்துவிட்டது".

ராஜகுமாரன் அங்கேயே அப்படியே உட்கார்ந்து விட்டான். ஆதிமுதல் ஒவ்வொரு சம்பவமும் அவன் நினைவிற்கு வந்தது. ஒவ்வொன்றும் மனத்தில் கூரிய வாள்போலக் குத்திப் பாய்ந்தது. சைலேசுவரர் கோவிலில் முதல் சந்திப்பு, சைலேசுவரர் முன்னிலையில் பிரதிக்ஞை, கோட்டையறையில் இருவருடைய முதல் பரிசய காலத்தில் உதிர்ந்த காதற்கண்ணீர், அந்த இரவின் சம்பவங்கள். திலோத்தமையின் மூர்ச்சை போன முகத்தோற்றம், மிலேச்சன் வீட்டில் அவள்பட்ட கஷ்டம், சிறையில் தான் மொழிந்த மூர்க்க வார்த்தைகள், கடைசியாக இந்தக் காட்டில் அவளுடைய மரணம் நெருங்கிய நிலை - இதெல்லாம் ஒவ்வொன்றும் ராஜகுமாரன் இருதயத்தை சல்லியங்களாகத் துளைத்தன.

ராஜகுமாரன் வெகுநேரம் பேச்சற்றுப் போய் உட்கார்ந்திருந்தான்.

"விமலா தன் விதவை நிலைக்காக மிலேச்சன் மேல் பழிதீர்த்துக் கொண்ட நாள் முதல், நான் என் பேத்தியைக் கூட்டிக் கொண்டு பட்டாணியர்களுக்குப் பயந்து வெவ்வேறு இடங்களில் சஞ்சரித்துக் கொண்டு வருகிறேன். அன்று முதல் திலோத்தமைக்கு நோய் ஆரம்பம்; வியாதியின் காரணம் உனக்கு நன்றாகத் தெரியும்".

ஜகத்சிங்கின் இருதயத்தில் ஓங்கி ஓர் அடி அடித்தது போல் இருந்தது.

"அவளை அநேக இடங்களுக்குக் கூட்டிக்கொண்டுபோய் அநேக சிகிச்சைகள் செய்து பார்த்தேன். நான் சிறு வயதிலேயே வைத்தியம் நன்றாகப் பயின்றிருக்கிறேன்; அநேக வியாதிகளையும் சொஸ்தம் செய்திருக்கிறேன். பிறருக்குத் தெரியாத அநேக மருந்துகள் எனக்குத் தெரியும். ஆனால் மனத்திலிருக்கும் வியாதிக்கு யாதொரு மருந்தும் இல்லை. இந்த இடம் தனியாக இருக்கிறதென்றுதான் இந்த இடத்தில் ஐந்தாறு நாளாக இருக்கிறேன். தெய்வ வசத்தால் நீ இங்கே வந்தாய். உன்னைப் பார்த்துவிட்டுத்தான் அந்தக் கடிதத்தை எழுதிவைத்தேன். முதலிலிருந்தே எனக்கு ஓர் ஆசையிருந்தது. திலோத்தமைக்கு உடம்பு சரியாகாவிட்டால் எப்படியாவது ஒரு முறை அவளுக்கும் உனக்கும் சந்திப்பு ஏற்படுத்திக் கடைசி காலத்தில் அவளுக்கு ஓர் ஆறுதல் ஏற்படுத்த வேண்டுமென்று எண்ணியிருந்தேன். அதற்காகத்தான் உன்னை இங்கேவரச் சொன்னேன். ஆனால் இன்னும் இரண்டு நாட்களுக்குள் வியாதி குணம் ஆகாவிட்டால் அவளது மரணம் நிச்சயம் இனிமேல் திலோத்தமையின் உயிரில் ஆசை வைப்பது உபயோகமில்லை. உயிர் விளக்கு அணையும் தறுவாயில் இருக்கிறது".

இப்படிச் சொல்லிக்கொண்டே அபிராமஸ்வாமி மறுபடியும் கண்ணீர் விட ஆரம்பித்தார். ஜகத்சிங்கும் மளமளவென்று கண்ணில் நீர் பெருக்க கலங்கினான்.

திடீரென்று "நீ திலோத்தமையின் முன்பு போகக் கூடாது. இந்த நிலைமையில் உணர்ச்சி வேகத்தை அவளால் தாங்க முடியாது. நான் முதலில் போய் நீ வந்திருப்பதாகச் சொல்லி மனத்தைத் தயார் செய்கிறேன். பிறகு நீ வரலாம்".

இப்படிச் சொல்லிவிட்டு அபிராமஸ்வாமி மாளிகையின் அந்தப்புரத்தின் பக்கம் போனார். கொஞ்சநேரம் கழித்து வெளியே வந்து "வரலாம்" என்றார்.

ராஜபுத்திரன் பரமஹம்ஸருடன் கூட உள்ளே போனான். இடிந்து விழாத அறை ஒன்று இருந்தது. அதன் நடுவே ஒரு பழைய உடைந்த கட்டிலில், வியாதியால் மெலிந்த உடலுடன் திலோத்தமை படுத்திருந்தாள். அவள் அழகுமட்டும் குன்றவில்லை. அப்பொழுதுங்கூட அவளது அழகின் மிருதுவான சோபை அவளைச் சூழ்ந்து கொண்டிருந்தது. மறையப் போகும் அதிகாலையின் நக்ஷத்திரம்போல அவள் மனமோகன ஒளியுடன் இருந்தாள் பக்கத்தில் ஒரு கைம்பெண் உட்கார்ந்து கொண்டு கைகால் பிடித்துக் கொண்டிருந்தாள். அவள் ஆபரணங்களற்று, மெலிந்து, சோபையற்று இருந்தாள். விமலா கொஞ்சகாலத்திற்குமுன் நித்திய யௌவன சுந்தரிபோல் இருந்தாள். நிமிஷத்தில் கிழவியாக மாறிவிட்டாள்.

ராஜபுத்திரன் திலோத்தமையின் படுக்கையின் அருகே போய் நின்றபொழுது அவளுடைய கண்கள் மூடியிருந்தன; அபிராமஸ்வாமி உரக்க, "திலோத்தமா! ராஜகுமாரன் ஜகத்சிங் வந்திருக்கிறான்!" என்றார்.

திலோத்தமை கண்களைத் திறந்து ஜகத்சிங்கின் பக்கம் பார்த்தாள். அந்தப் பார்வையின் மென்மையில் ஓர் அன்புருக்கமும் இருந்தது. கபடத்தின் லவலேசச் சின்னங் கூட அதில் இல்லை பார்த்த நொடியிலேயே கண்பார்வையைத் தாழ்த்திக்கொண்டாள். கண்களில் நீர் தாரை தாரையாக வழிந்தது. ராஜகுமாரனால் அதற்குமேல் சும்மா இருக்க முடியவில்லை. வெட்கம் பறந்தது. திலோத்தமையின் காலடியில் உட்கார்ந்துகொண்டு மௌனமாகத் தன் கண்ணீரால் அவள் தேகத்தை நனைத்தான்.

இருபத்தோராம் அத்தியாயம்

கனவு

தாய்தந்தையற்ற அநாதை - வியாதிப்படுக்கையில், அவள் பக்கத்தில் ஜகத்சிங்: இப்படி இரவு பகலுமாகக் கழிந்து கொண்டிருந்தன. ராஜபுத்திர குலத்தின் திலகம் அந்த உடைந்த கட்டிலின் பக்கத்தில் இருந்துகொண்டு திலோத்தமைக்குச் சுச்ருஷை செய்தான். அந்த வாய்பேசாத கைம்பெண்ணின் பணிக்கு உதவியாக இருந்தான். அவள் அவன் முகத்தைக் கண்ணெடுத்துக்கூடப் பார்க்கவில்லை. அவளுடைய பனியாற்கருகிய பத்ம முகத்தில் முன்போலச் சிரிப்பு ததும்பவில்லை.

கூடாரம் எங்கே? சேனை எங்கே? கூடாரத்தைக் கலைத்துக் கொண்டு சேனை பாட்னாவிற்குத் திரும்பப் போய் விட்டது. கூட வந்தவர்கள் எல்லாம் எங்கே? தாருகேசுவர தீரத்தில் சேனாதிபதிக்காகக் காத்துக்கொண்டிருந்தார்கள். அவன் எங்கே? கடும் கோடை வெயிலில், கருகும் மொட்டைக் கண்ணீர்விட்டு மறுபடியும் மலர்ச்சியுறச் செய்து கொண்டிருந்தான்.

மொட்டு, கொஞ்சம் கொஞ்சமாக மலர ஆரம்பித்தது. வாழ்க்கையில் அன்புதான் இந்திரஜால வேலை செய்கிறது. வியாதிக்கு மாற்றான முக்கியமான ஔஷதம் அன்பு. அது இல்லாவிட்டால் இருதய நோயை எவ்வாறு குணப்படுத்த முடியும்?

இந்த மாதிரியாக அணையும் தறுவாயிலிருந்த விளக்கு, கொஞ்சம் கொஞ்சமாக எண்ணெய் ஏற ஏற மறுபடியும் மலர்ந்து உயர்ந்து எரிய ஆரம்பித்தது. கோடையில் உலர்ந்து போன கொடி, ஆடிமாதத்தின் புதுமேகத்தின் மழையில், மறுபடியும் தளிப்பதுபோலத் திலோத்தமை நாளுக்கு நாள் அபிவிருத்தியடைந்து புத்துயிர் பெறுவதை ஜகத்சிங் கண்டான்.

சிறிது காலத்திற்கெல்லாம் படுக்கையை விட்டு எழுந்து உட்கார்ந்தாள். விமலா இல்லாதபொழுது, இருவருமாகக் கிட்டகிட்ட உட்கார்ந்துகொண்டு பழையநாள் கதையைப் பற்றிப் பேசுவார்கள். முன்பு பேசின பேச்சுக்கள், மனத்தில் செய்த பிழைகள், அநியாயமான எண்ணங்கள் - எல்லாவற்றையும் விஸ்தரித்துப் பேசினார்கள். விழிப்பிலும் தூக்கத்திலும் கண்ட கனவுகளையும் மனமோகன ஆசைகளையும் சொல்லிக் கொண்டார்கள். வியாதிப் படுக்கையில் படுத்திருந்த பொழுது, தான் ஒருநாள் கண்ட கனவைத் திலோத்தமை சொன்னாள்:-

'இளவேனிற் காலத்துப் புதுச் சோபை நிறைந்த ஒரு பருவதத்தில் அவள் ஜகத்சிங்குடன் புஷ்பக்கிரீடை செய்து கொண்டிருந்தாள். குன்றம் குன்றமாகச் சென்ற புது மலர்களைக் கொய்தெடுத்துக் கொண்டுவந்து மாலை தொடுத்தாள்; தான் ஒரு மாலை கழுத்தில் அணிந்து கொண்டாள். மற்றொரு மாலையை ஜகத்சிங்கின் கழுத்தில் போட்டாள். மாலை அவனுடைய இடையிலிருந்த வாள்மேல் பட்டதும் அறுந்துபோய் விட்டது இனிமேல் உங்கள் கழுத்தில் மாலை போடுகிறேனா பாருங்கள்; உங்கள் கால்களை நன்றாகக் கட்டிப் போட்டு விடுகிறேன் என்று சொல்லிக் கொண்டு மாலையை நெருக்கமாகக் கட்டினாள். அதிலேயே கவனமாக இருந்துவிட்டாள். ஜகத்சிங் மெள்ள நழுவிவிட்டதைப் பார்க்கவில்லை. பார்க்கிறாள், ஆளைக் காணோம்! பின்னாலேயே ஓடினாள். ஜகத்சிங் வேகமாகப் பருவதத்திலிருந்து கீழே இறங்கத் தொடங்கினான். வழியில் ஒரு குறுகிய சிற்றருவி இருந்தது. ஜகத்சிங் அதைத் தாண்டி அந்தப்புறம் போய்விட்டான். திலோத்தமை பெண்! - தாண்டிப் போக முடியவில்லை. எங்கே சிற்றோடை பெரிய நதியுடன் சேருகிறதோ அங்கே போய்ப் பார்த்தாள்; அக்கரை போவதற்கு வழியிருக்குமென்று எண்ணி அதுபோன வழியிலேயே பருவதத்திலிருந்து கீழே இறங்கிப் போனாள். ஓடை சிறு நதியாயிற்று; சிறு நதி பெரிய நதியாற்று. ஜகத்சிங்கைக் காணோம்! கரை அதி உயரம்; இறங்குவதே கஷ்டம், காலடியிலிருந்து கரை உடைந்து மண்கட்டிகள் ஆற்றில் போய் விழுந்துகொண்டிருந்தன.

கீழே நதியோ வெகு வேகத்துடன் போய்க்கொண்டிருந்தது. பார்க்கிறதற்குக்கூடப் பயமாயிருந்தது அவளுக்கு. திலோத்தமை மறுபடியும் பருவதத்தின் மேலேறி நதியிடமிருந்து தப்பியோட முயன்றாள்; ஆனால் காலடி எடுத்துவைக்க முடியவில்லை. திலோத்தமை உரக்க அழ ஆரம்பித்தாள். திடீரென்று யமன்போலக் கத்லுகான் அங்கே வந்து அவளை வழிமறித்துக் கொண்டான். கழுத்திலிருந்த பூமாலை கனமான இரும்புச் சங்கிலிபோலாகிவிட்டது. கையிலிருந்து பூமாலை கைநழுவிக் காலில் விழுந்து இரும்பாகி விட்டது. திடீரென்று அசைவற்றுப் போனாள். கத்லுகான் அவள் கழுத்தைப் பிடித்து இழுத்து ஆற்றில் தள்ளிவிட்டான்.

கதையை முடித்துவிட்டுத் திலோத்தமை கண்ணீருடன் "யுவராஜ! இது வெறும் கனவல்ல. உங்களுக்காக நெருக்கமான பூமாலை தொடுத்தேன். அது நிஜமாகவே காலில் இரும்புச் சங்கிலியாகி விட்டது. நான் கழுத்தில் போட்ட மாலை வாள் முனையில் பட்டு அறுந்துவிட்டது!" என்றாள்.

ஜகத்சிங் சிரித்துக்காண்டு தன் இடுப்பிலிருந்து கத்தியை எடுத்து திலோத்தமையின் காலடியில் வைத்தான்.

"திலோத்தமா! உன்னிடம் இருக்கும்போது நான் வாளைத் தரிக்காமலேயே இருக்கிறேன். மறுபடியும் மாலை கொடு. உன் எதிரிலேயே வாளை ஒடித்துவிடுகிறேன்".

திலோத்தமை பதில் சொல்லவில்லை.

"நான் ஒன்று ஒளிக்காமல் சொல்லுகிறேன் திலோத்தமா!"

திலோத்தமை வெட்கித் தலைகுனிந்து கொண்டாள்.

அன்று மாலை அபிராமஸ்வாமி அந்த மாளிகையின் மற்றோர் அறையில் ஒரு விளக்கடியில் உட்கார்ந்துகொண்டு ஏதோ படித்துக் கொண்டிருந்தார். ராஜபுத்திரன் அவரிடம் சென்று மரியாதையுடன், "ஸ்வாமி! ஒரு விண்ணப்பம். திலோத்தமை இப்பொழுது வேரிடம் போவதற்கு வேண்டிய சக்தி பெற்றுவிட்டாள் ஆகையால் இந்தப் பாழடைந்த இடத்தில் திண்டாடுவானேன்?"

ஜகத்சிங் சுகத்தை எண்ணி அயேஷா பிரார்த்தனை செய்தாள் என்ற பிரஸ்தாபம் ஜகத்சிங்கிற்று மகத்தான வருத்தத்தை உண்டாக்கும் என்றும் அயேஷாவிற்குத் தெரியும். அயேஷாவைப் பற்றிய பிரஸ்தாபமே அவனுக்கு மனக்கிலேசத்தை உண்டாக்கும் என்பதும் அவளுக்குத் தெரியும்.

திலோத்தமை அயேஷா சொன்னபடியே செய்வதாக ஒப்புக் கொண்டாள்.

ஆனால் "என்னை மறந்துவிடாதே, திலோத்தமா! நீ மறவாமல் இருப்பதற்காக இந்த அடையாளத்தைக் கொடுக்கிறேன். அதை எங்கேயும் கெட்டுப் போக்கிவிடாதே!" என்று சொல்லி அயேஷா தன் வேலைக்காரியைக் கூப்பிட்டு ஏதோ உத்தரவு செய்தாள்.

உத்தரவுப்படி வேலைக்காரி, யானைத் தந்தத்தால் செய்த ஒரு பெட்டியைக் கொண்டுவந்தாள். அதில் விலையற்ற ரத்தின ஆபரணங்கள் இருந்தன. அயேஷா வேலைக்காரியைப் போகச் சொல்லிவிட்டுத் தானே எல்லா ஆபரணங்களையும் எடுத்துத் திலோத்தமைக்கு அணிவித்தாள்.

திலோத்தமை ஒரு பெரிய செல்வவானின் புதல்வி. அப்படியிருந்தும் அவள் பிரமித்துப் போய்விட்டாள். நகைகளின் அற்புதமான வேலைப்பாடு, அவைகளின் நடுவேயிருந்த வைரம் முதலிய ரத்தினங்களின் நிகரற்ற ஜோதி - இவைகளைக் கண்டு ஆச்சரியம் அடைந்தாள். உண்மையில் அந்த நகைகளை நவாப் அயேஷாவிற்காகச் செய்தான். அயேஷா தன் அங்கங்களுக்கென்று தயாரிக்கப்பட்ட அவ்வளவு நகைகளையும் திலோத்தமைக்குக் கொடுத்துவிட்டாள்.

திலோத்தமை ஏதோ மரியாதையாகப் பதில் சொன்னாள்.

"திலோத்தமா! இவற்றையெல்லாம் அவ்வளவு உயர்வாகப் பேசாதே. உன் இருதயத்தில் இன்று நீ அணிந்திருக்கும் ஆபரணத்தின் கால் தூசி பெறுமா இவையெல்லாம்?"

இந்த வார்த்தைகளைச் சொல்லும்போது பீறிட்டுக் கொண்டு வந்த கண்ணீரை அயேஷா எப்படியோ அடக்கிக் கொண்டு விட்டாள். திலோத்தமை அதைச் சிறிதும் கவனிக்கவில்லை.

அலங்காரம் செய்து முடிந்ததும், அயேஷா திலோத்தமையின் இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டு அவள் முகத்தை உற்றுப் பார்த்தாள்.

'அன்பைப் பிரதிபலிக்கும் இந்தக் கபடமற்ற முகத்தைப் பார்த்தால் உண்மையிலேயே என் பிராணேசுவரரின் மனவேதனை மாறும். ஒருவேளை ஈசுரவனின் சித்தம் வேறு விதமானால், இவள் மூலமாக ராஜகுமாரனுக்கு நிலையான சுகம் ஏற்படவேண்டுமென்று அவரைப் பிரார்த்திக்கிறேன் என்று அயேஷா தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

"திலோத்தமா! நான் போய் வரட்டுமா? உன் கணவர் துடித்துக்கொண்டு காத்திருப்பார். நான் அவரிடம் சென்று சொல்லிக் கொள்வதனால் காலதாமதம் ஆகக்கூடாது. கடவுள் உங்களுக்குத் தீர்க்காயுளை அளிக்கட்டும்! நான் கொடுத்த ரத்தினங்களை அணிந்து கொண்டிரு. இன்னும், என்னுடைய - உன்னுடைய - உயர்ந்த ரத்தினத்தை எந்நாளும் இருதய மத்தியில் வைத்துக்கொண்டிரு!" என்றாள் அயேஷா.

உன்னுடைய உயர்ந்த ரத்தினம் என்றபோது அயேஷாவிற்கு நெஞ்சடைத்துக் கொண்டது. அவளுடைய கண்கள், ததும்பி நின்ற நீரின் பாரத்தில் துடித்தன.

"ஏன் அழுகிறீர்கள்?" என்று திலோத்தமை பதறிப்போய்க் கேட்டாள்.

அயேஷாவின் கண்ணீர் தடதடவென்று பெருகி ஓடிற்று. ஒரு நிமிஷம் அங்கே நின்றுவிட்டு, சட்டென்று வெளியேறி, அயேஷா பல்லக்கில் போய் ஏறிக்கொண்டாள்.

அயேஷா தன் மாளிகைக்குத் திரும்பின பொழுது இரவு நேரம். அயேஷா தன் அலங்காரத்தைக் கலைத்துவிட்டுக் குளிர்ந்த காற்று வீசும் ஜன்னலின் அருகே போய் நின்று கொண்டாள். ஆகாயத்தில் ஆயிரக்கணக்கான நக்ஷத்திரங்கள் ரத்தினங்கள்போலப் பிரகாசித்தன. மெல்லிய காற்று மரங்களின் உச்சியிலிருந்த தளிர்களைத் தழுவிச் சென்றது. கோட்டையின் மேல் உட்கார்ந்துகொண்டு ஓர் ஆந்தை முறிற்று. கீழே அவள் நின்ற இடத்திற்கு நேராகக் கோட்டை அகழ் மௌனமாக ஆகாயத்தை அப்படியே பிரதிபலித்துக் கொண்டிருந்தது.

அயேஷா ஜன்னலில் இருந்துகொண்டு வெகுநேரம் யோசனை செய்தாள். கை விரலிருந்து ஒரு மோதிரத்தைக் கழற்றினாள். அது ஒரு விஷச் சிமிழ்.

"இந்த விஷ ரஸத்தைக் குடித்துவிட்டு என் தாகத்தை ஒரே அடியாக நிவர்த்திசெய்து கொண்டு விட்டாலென்ன?" என்று ஒருமுறை யோசித்தாள்.

"இதற்காகவா கடவுள் என்னைப் பிறப்பித்தார்? நான் இதைத் தாங்க முடியாவிட்டால் இந்தப் பெண் ஜன்மம் எதற்காக? ஜகத்சிங் கேட்டால் என்ன நினைப்பார்?" என்று மற்றோர் எண்ணம் தோன்றிற்று.

மறுபடியும் மோதிரத்தை விரலில் போட்டுக்கொண்டாள். எதையோ நினைத்துக்கொண்டு மறுபடியும் அதைக் கழற்றினாள்.

இந்த ஆசையை அடக்கப் பெண்ணால் முடியாது. அதற்குத் தூண்டுதலாக இருக்கும் இந்த மோதிரத்தைத் தூர எறிந்துவிட வேண்டும்.

இவ்வாறு யோசித்துக்கொண்டே அயேஷா அந்த விஷ மோதிரத்தைக் கீழிருந்த அகழில் எறிந்தாள்